# KEECHAKA.

## (Maha Bahratham)

A TAMIL DRAMA WITH SONGS

BY

C. M. GANGATHARA SIVA.

*(Author of Pandavas' Exile)*

HONI SOIT QUI MALY PENSE

*(Evil to him who evil thinks)*

MADRAS:

PRINTED AT THE WAVERLEY PRESS

1918.



Price As. 6.] [Postage Extr.

சுகமயம்.

# கீசகன்.

(இன்னிசைப் பாடல்களமைந்த தமிழ் நாடகம்)



இஃது

சி. மு. கெங்காதர சிவா அவர்களியற்றியது

"கெடுவான் கேடுநினைப்பான்"—பழமொழி

சென்னை.
வேலால் அச்சியந்திரசாலையில்
பதிப்பித்தது

1918.

விலை அணா 6.] [தபால் கூலி வேறு.

# Foreword.

Emboldened by the popularity and the success of his first publication, the Author has brought out his second drama "Keechaka" in continuation of his previous compilation "The Paudavas' Exile". The present production is full of the merits pointed out in the preface to the latter work and the flow of language is by far improved. There abounds a wealth of ideas inculcating high moral principles. A standard of high *morale* is preached throughout the work, and the calumny attaching to certain heinous vices is forcibly pointed out The Author is one of those ardent workers for the elevation of the Indian stage who finds a great recompense for his labours in the appreciation of his works. It is believed that the Author will progress in his field of compilng dramas and make useful and enduring additions to Indian Dramatic Literature. This work is recommended to the kind and indulgent patronage of the reading public, whose criticisms with a view to chasten the present work into absolute faultlessness will be thankfully adopted by the Author.

MADRAS
15—8—1918

N. K. M.

வித்வான்

## ஸ்ரீமத் திரு. சிந்நய நாயகரவர்களியற்றிய

### சாற்றுக்கவி.

நாடுகின்ற-மறைமன் கோலைடமதனமே
யறிஞரோலா கவிலஞானக்,
கூடுவளைம் வியாதனுரை பாரதத்திற்
கீசகன்றன் கொலையாவும்,
ஈடுபெறு நவரசமாத் திராவிடநா டகத்தமிழா
லீர்ந்தா னென்றும்,
பீடுபெறு மெழில்கங்கா தரனென்னுங் குணசீலப்
பெரியோன் மாமேதா.

# முகவுரை.

உலகமுவப்ப வலகில் சீர்வாய்ந்த வியாச மகாமுனிவர் சாமபேத தான தண்ட மென்னுஞ் சதுர்வித வுபாயங்களையும், அறம் பொருளின்பம் வீடென்னும் புருஷார்த்தம் நான்கினையும், மண்ணுலகிலுள்ள மன்பதைகளறிந்துய்யுமாறு திருவாய் மலர்ந்தருளிய மகாபாரதத்தில் இராஜ தந்திரங்களும் மநுநீதியும் பக்தியும் யோகமும் ஞானமும் அமைந்துள்ளன, அன்றியும் தாயாதிகளுக்குரிய பாகத்தைத் தராத துரியோதனன் முதலியோரடைந்த சிரமமும் செய்ந்நன்றிகொன்றவர்கள் அடைந்த கதிகளுமாகிய வைகந்தம் விதிவிலக்குகளும் நிறைந்துள்ளன, அவைகளில் பிறர்மனை நயவாமை யென்னு நீதியை நீக்கி பாண்டவர் மனைவியாகிய திரௌபதியை வலாத்காரமாகத்தொடர்ந்த வதிபராக்ரம சாலியாகிய கீசகன் வீமசேனனால் அதோகதிக்காளாகும் வண்ணம் அழிந்தனன், இதனால் இவ்வுலகிலுள்ளவர்கள் பிறர்தாரத்தைக்கண்டு மோகங் கொள்ளலாகாதென்னும் மார்க்கத்தை யறிந்துய்யும் வண்ணம் இக்கீசகசம்பாரத்தை யெல்லோரும் எளிதிலுணருமாறு செந்தமிழ் நடையில் நாடகமாக வியற்றி கற்றவரு மற்றவருங் கண்டுகளிக்க இன்னிசைப்பாடல்களோடு மமைத்திருக்கின்றனன் இதில் பிழையுளதேல் அறிஞர் மன்னிக்கும் வண்ணம் விநயத்துடன் கேட்டுக்கொள்கின்றேன்.

கெங்காதரன்.

# நாடகபாத்திரங்கள்.

## புருஷர்கள்

1 தருமர் ... பாண்டவர் தலைவர்
2 பீமன்
3 அர்ச்சுனன்
4 நகுலன்
5 சகாதேவன் } தருமருடைய தம்பியர்
6 விராடன் ... விராடதேசத்தரசன்
7 கீசகன் ... சேநாநாயகன்
8 புத்திசிகாமணி ... கீசகன் தோழன்
9 ஜெயவீரன் ... விராடனின் மல்லர் தலைவன்
10 கங்கபட்டர்
11 பலாயனன்
12 பிருகந்நளை
13 தந்திரிபாலன்
14 தாமக்கிரந்தி } பாண்டவர்களின் மாறுபெயர்
15 தௌமியர் ... முனிவர்
16 கங்காதரன்
17 சந்திரசேகரன் } தௌமியரின் சீடர்கள்

## ஸ்திரீகள்

18 திரௌபதி ... பாண்டவரின் பத்தினி
19 விரதசாரணி ... திரௌபதியின் மாறுபெயர்
20 சுதக்கணை ... விராடனின் மனைவி
21 உத்தரை ... சுதக்கணையின் புதல்வி
22 மஞ்ஞுண்மணி
23 வனஜாக்ஷி } சுதக்கணையின் தோழியர்

மந்திரிகள், பிரதானிகள், சேனாதிபதிகள், வீரர்கள், சேவகர்கள், பிரபுக்கள், நகரமாந்தர் முதலியோர்.

## நாடக நிகழ்விடம்

பெரும்பாலும் தௌமியவனத்திலும், விராடபுரத்திலும் சிறுபான்மை விராடபுரத்தையடுத்த சோலையிலும்.

## விநாயகஸ்துதி.

### நாட்டை—ஆதி

#### பல்லவி.

மூலா மறைமுதல் நடமிடும் மேலா
மும்மதகஜமுக சீலா
மூஷிகவாகன கோலா கிருபை செய்குவாய் (மூலா)

#### அநுபல்லவி.

சீலார் சிவஞானியரிதமுமுயும்
சீத நாத சதுர்வேத அதீத (மூலா)

#### சரணம்.

நீலகண்டரிதய நேய சிகாமணி
நித்திய நின்மல நிஷ்களமாமணி
யேலவார் குழளாளுமை கண்மணி
இனித புனித குண கனதன நவமணி
இரக்கமேவு மிகபரசுக மெய்பொருள்
சிறக்கும் ஓம் பிரணவஜப கணபதியருள். (மூலா)

## சரஸ்வதிஸ்துதி.

### ரௌரிஞ்சிராஜு என்ற வண்ணம்.

#### பல்லவி

கலாவதி சரஸ்வதி கமலதள
உலாசமயசோதி பாரதி (கலாவதி)

#### அநுபல்லவி.

கலாப அணி வேணி சதுர்முகனார்
காந்தாமணி கனகபூஷணி (கலாவதி)

#### சரணம்.

நலமே நாவிலுறையணி
நான்மறையிலுறை நாயகியே நனி
தலமேபுகழோங்க கிருபைசெய்
தாயே கல்யாணி வாணி (கலாவதி)

## விஷ்ணுஸ்துதி.

### அடாணா—ரூபகம்.

### பல்லவி.

இரகுபதி கிருபாநிதி
இராமசந்த்ரபூபதி (இர)

### அநுபல்லவி.

சகலஜீவ சுகாதார (இர)
சற்குண, நிற்குண கருணா
சற்ஜன ரிதசரணா ஸ்ரீ

### சரணம்.

சங்குசக்கர துங்கபாணி
சதுரா சாரங்கபாணி
பங்கஜ விலாச வேணி
பதியே பதங்கதியே
இதுதகியே கிருபை பதியே ஸ்ரீ (இர)

## சிவஸ்துதி.

ஸாம்பஸதாஸிவ ஸாம்பஸதாஸிவ
ஸாம்பஸதாஸிவ ஸாம்பஸிவா.

1. அத்புதவிக்ரஹ அமராதீஸ்வர
அகணிதகுணகண அமிர்த ஸிவா. (ஸாம்பஸதாஸிவ)
2. ஆனந்தாம்ருத ஆஸ்ரிதரக்ஷக
ஆத்மானந்த மஹேஸ ஸிவா. (ஸாம்பஸதாஸிவ)
3. இந்துகளாதர இந்த்ராதிப்ரிய
ஸுந்தரரூப ஸுரேஸ ஸிவா. (ஸாம்பஸதாஸிவ)
4. ஈஸஸுரேஸ மஹேஸஜனப்ரிய
கேஸவஸேவித கீர்த்தி ஸிவா. (ஸாம்பஸதாஸிவ)
5. உரகாதிப்ரிய பூஷணஸங்கர
நரகவிநாஸ நடேஸ ஸிவா. (ஸாம்பஸதாஸிவ)

உ

கணபதி துணை.

# கீசகன்.

காப்பு.

சீலமே! சிற்பரமே! சித்திதரும் ஐங்கரனே!
மூலமே! யார்க்கும் முதற்பொருளே!—மேலாம்
மறைநான்கோ டைந்தென்னு மாபாரதம் சொல்
நிறைநாவில் நின்றிடுவாய் நீ.

அங்கம் I — காக்ஷி I

இடம் :—தௌம்யவனத்தில் ஓர் தனியிடம்.
காலம் :—பிற்பகல்.
பாத்ரர் :—தருமர்.

(தவத்திற்குச்சென்ற அர்ச்சுனன் வா
வில்லையென்று தருமர் வருந்து
தல்.)

தருமர் :—(உருக்கத்துடன்) சிவ! சிவ! சம்போ!

சிவஸ்தோத்ரம். (அனந்தபைரவி.)

ஒருமருந் தாகியுள்ளா யும்பரோ டுலகுக்கெலாம்
பெருமருந் தாகிநின்றாய் பேரமுதின் சுவையாய்க்
திருமருந் தாகியுள்ளா யாருநோய் வல்வினைகட்கு
அருமருந் தாலவாயிலப் பனையருள் செய்யாயே.

உலகெலாம் நிதிபெறும் ஒருபூதக் கடவுளே! மாக்காப்பு வேந்திய மாசிலாமணியே! உண்மை யறிவானந்த உருவாகி யெவ்வுயிர்க்குந் தன்மயமாய்நிற்குந் தற்பரா! நீலகண்ட நின்மலக்கடவுளே! இம்மைப் பயனாகிய புகழையும், சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவமாகிய மோக்ஷத்தையும் பெறுதற்குக் காரண மூர்த்தியாயுமிலங்

குந் தயாபரா! நானென்கிற அஞ்ஞான ஆணவத்தால், துக்கத்தைச் சுகமென்றும், அசுத்தத்தை சுத்தமென்றும் ஆன்மஞான மில்லாது ஆடு மாடுகளைப்போல் நாயினுங் கொடிய பாவியாந் துரியன் மேன்மேற்புரியுந் தீவினைகள் யாவும் தேவரீர் திருவுளந் தெரிந்ததன்றோ? பரம்பொருளே! நாடுநகரங்கள் முதல் யாவையும், அவர்களுக்கே உரிமையாகச் செய்து, காட்டே கதியெனக் காலங்கழிக்கு மெங்களுக்கு இன்னுந் துன்பத்தைக் கொடுக்க எண்ணி விட்டனையோ?

பைரவி—அடதாளம்.

பல்லவி.

திருவுளந் தெரியேனே! கருணை யாதோ?
பெருமானே! அறியேனே! (திரு)

அநுபல்லவி.

அருந்தவமே யியற்றி வருவேனெனவே சாற்றி
அர்ச்சுனனென் தம்பி அணுகினான் உமைநம்பி (திரு.

சரணம்.

பொருந்திய மனமொடு பொற்பாதம் பெற்றாரோ?
பொல்லாப் பகைவர் மாய்கைதன்னால் துன்புற்றாரோ?
வருந்தியே பசியினால் வாடிக்களைத்தாரோ?
வனசரங்களாற்றுயர்வந் திடயிளைத்தாரோ? (திரு)

(பெருமூச்செறிந்து) தயாநிதி! மூலப்பிரகிருதியி லழுந்திக் கட்டுப்பட்ட ஆன்மாவுக்குக் கருணைப் பிரவாகமென்னும் பேரருளால் கரசரணாதி யவயவங்களைக் கொடுத்து, பூமியில்பிறப்பித்து, போஷித்து, பரிபாலித்து தன்குட்டிகளைத் தழுவத்தெரியாத சக்தியற்ற பூனை வாயினாற்கவ்விச் செல்வதுபோல், தன் சக்தியற்ற ஆன்மாவுக்கு வழிபாடு செய்து, தமது யதார்த்த தத்துவங்களை யுணரும்படி செய்யும் தயாநிதி! வேதமுனிவர் விளம்பியவாறே மாதவஞ்செய்து மாண்புடையருளால் பாசுபதாஸ்திரம் பரியுடன்பெற்று வருவேனென்று விரைந்துமே சென்ற அருமைத்தம்பிக்கு அல்லலென்ன விளைந்ததோ? வருடங்களும் ஐந்துக்குமேலாய்விட்டனவே? தேவதேவா? நின் கழலே பெற்று களித்து நின்றனரோ? சுழலுறுங் காற்றால் சுழ

ன்று விழுந்தனனோ? பகைவர் மாய்கையால் பதைக்க நேர்ந்ததோ? யாதோ வறியேன்? சிவமே! உமது பாதமே கதியெனப் பற்றுதல்கொண்டு தவமது செய்யத் தனியேபோந்த தம்பிக்கு என்ன ஆபத்து நேர்ந்ததோ?

[சோர்வடைகின்றார். அர்ச்சுனன் பிரசன்னமாகின்றான்.]

அர்ச்சுனன் :— விருத்தம்.

தலைவரே வருந்த வேண்டாம் தகைமைசேர் தவத்திற் காக
மலைவளங் கடந்தே யீசன் மலரடி காண லுற்றேன்
பலனுறும் பெரிய பாசு பாதாஸ்திரம் பரிவாய்ப் பெற்றே
நலனுறும் வெற்றி யோடு நானிதோ வந்தேன் வந்தேன்.

[சிரம்வணங்கி கரங்குவித்து நமஸ்கரித்து நிற்கின்றான்.]

தருமர் :—(அன்பின் பெருக்கத்துடன்) ஆ! என் ஆருயிர்த்துணைவா! (மார்போடு அணைத்துக்கொண்டு) என்னை ஆராத்துயரத்திற் காளாகச் செய்தனையோ? காணக்கிட்டாமணியே! என் னுடற்கினிதாங் கண்ணுதற் கடாட்சம் இன்புறப் பெற்றனையா!

அர்ச்சுனன் :—(புன்னகையரும்ப) அண்ணா! பெற்றேன். புகழ் பெறு நமது புண்ணியவசத்தால் மகிழுடன் பாசுபதாஸ்திரம் பெற்றேன். களிப்புற்றேன், விண்ணுலகமு முற்றேன். இந்திரப்பதவியும் ஆளப்பெற்றேன். நமது சத்துருக்களைச் சங்கரிக்கத்தக்க சகல அஸ்திரங்களையுங் கற்றேன். உற்ற திருவருட் பேற்றால் இங்குற்றேன்.

தருமர் :—(மகிழ்ச்சியுடன்) கண்மணி விஜயா! மாசிலாமனத்தோர் பூசனைபாற்றும் ஈசனார் திருவருள் எவ்விதம் பெற்றனை? பார்த்தா! பேசரும் புகழினைப் புகலுக?

அர்ச்சுனன் :—(கம்பீரத்துடன்) கண்ணிமை யொக்கும் அண்ணா!

சுருட்டி.—ரூபகம்.

பல்லவி.

பரமசிவத்தின் பெருமை சொல்ல
பாத்திர னாவேனோ? நல்ல (பரம)

அநுபல்லவி.

ஒருமை யுள்ளோ ருளத்தி லாடும்
ஒதரும் பெருங் கருணை நீடும் (பரம)

ராகம்.

அடியார்களி னிடர்நீக்கியே
அணுகும்பவப் பிணிபோக்கியே
உடையார்சிவ மயமாக்கியே
அடிமைகொ ளும்படிக்கியே
முடிசேர்மதி நதிசூடிய (பாரம்)

அண்ணா! யான் காடு, மலை, வனம், வனந்திரம் நதிகள்முதல் யாவையுங்கடந்து இமோத்கிரிச்சாரலடைந்து, பஞ்சாக்னிகளையும் வளர்த்து, சத்த ஸ்பரிச ரூப ரச கந்தமென்னும் ஐம்புலன்களையும் வாட்டி, மதயானைகளையொக்கும் பொறிகளைப் புலன்களின்மேற் செல்லவொட்டாமல் அறிவென்னும் அங்குசத்தாலடக்கி, நெஞ்சமாகிய குதிரையை பகிர்முகம் ஓடவிடாது, பக்தியாகிய கடிவாளத்தை யிறுக்கி வைராக்கியமென்னுந் தளையைப்பூட்டி, அந்தர்முகத்தில் நிறுத்தி, சற்குரு கடாட்ச வீட்சண்யத்தின் மந்திர பலத்தால் சகலமும் பூரண கைவல்ய மடையப்பெற்று ஞானிபோல் நெறி நின்றனன். நவத்தோர்க்கென்றும் தாயகமாகும் சிவத்தின் பெருமை செப்பவெளிதோ? அண்ணா! பாதக மூரியன் நிதுரைக்கிசைந்து பன்றிபோல் உருவங்கொண்டுமே யென்னைக் கொன்றிடப் போந்த மூகாசுரன்றன் கொடுங்குணம் அறிந்து, கன்றினைத்தேடுகான்வரும் பசுப்போல் மன்றுளாடிய மாசிலாமணியும் வேடுவராக உருவது கொண்டு பொல்லாப் பன்றியை வில்லாலெய்து பின்னவர் போந்ததைப்புல்லனறியாது என்வில்லாலடித்து வல்லுயிர் போக்கினேன். எல்லாம்வல்ல யிறைவன்விரைவில் வில்லுங் கையுமாய் விளங்கி என்முன், பொல்லானென்று புறையறயிகழ்ந்து மற்போற்செய்து மண்ணிற்றள்ளி மனதைக்கலக்கி மாயமாய்ச்சென்றனர். சோதிக்கவந்த சுடர்விளக்கென்றும், கடாட்சிக்கவந்த கருணைக்கடலென்றும் மெய்யொளிவிளங்கி மனமொழிமெய்யால் கண்ணீர்தாரை தாரையாய் விட்டு ஹர! ஹர! என்று அரற்றியே கதறினேன். கருணையிற் சிறந்த கண்ணுதற்பெருமான் வெள்ளிடைபோந்த விலங்கொளிசாட்ட பாசுபதாஸ்திரம் பரி

வுடன் தந்து ஆசிகூறி அந்தர்த்தானமாயினர். தேவர் கோமான் திருவுளப்படியே காலகேய நிவாதகவசர்கள் மேலாம் பதவியை வேரு[...]களைந்து, ஜெயஜெயவென்று அமரர்களார்ப்ப விஜயனென்ற வெற்றியைப் பெற்று சில மிகுந்த திருவருளாலே கோலமாம் பதவியை மேவியே வந்தேன்.

தருமர் :—(பரவசத்துடன்)

பூரிகல்யாணி—ரூபகம்.

துக்கடா.

மா! தவப்பயனிது வல்லவோ?
மா லயனுமரிய (மாதவ)
தாதையர்கள் புகழிலங்க;
தகைமை குருகுலம் விளங்க;
ஆதிநாதன் அருள் துலங்க;
அரிய, உரிய, துரிய, பெரிய (மாதவ)

(ஆனந்த பாஷ்பம்பெருக) பற்குண! உன் தவமே தவம். உன்போன்ற புண்ணியசீலர்கள் உலகத்தில் உளரோ? எண்ணிற் கோடியர் தவமியற்றியும் கண்ணுதற் பெருமானைக் கண்ணுற் கண்டிலர். உன் புண்ணியமே புண்ணியம். "மகற்றந்தைக் காற்று முதவி யிவன் றந்தை, யென்னோற்றான்கொல் லென்னுஞ் சொல்" என்னும் வேதவாக்கியத்திற் கிணங்க, உன்னைப் பெற்றோர் தவமே தவம். அன்னோர்செய்த புண்ணியம் உன்னால் விளங்கியோங்குவதோடு உன்னோடுற்ற எங்களுக்கும் பெருங் கீர்த்தி வந்துலாவுகின்றது. இதனினும் பெறத்தக்க பேறு வேறுளதோ? தம்பி! "நன்மையே செய்தால் நன்மையே விளையும், துன்மையே செய்தால் துன்மையே விளையும்" நன்மையும் துன்மையும் பின்வரக் காணலாமென்ற வாக்கியம் பிரத்யட்சமாய் நமக்கே அத்தாட்சி யாயிற்று. இனி சாதிக்கவேண்டிய விஷயங்களை அமைதியோடு ஹோமத்தில் நெய்விடுவதுபோல், ஆலோசித்து நடத்தவேண்டும். வா நம் முனிவர் வாசஸ்தல மேகுவோம்.

அர்ச்சுனன் :—அண்ணா! ஆக்கினைப்படியே. (போகிறார்கள்.)

## அங்கம் I. காக்ஷி 2.

இடம் :—தௌமியர் ஆஸ்ரமத்தை யடுத்தசோலை.

காலம் :—முன்மாலை.

நடர் :—தருமர், பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன், திரௌபதி.

[பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் செய்வதற்கு ஆலோசிக்கின்றனர்.]

**தருமர் :**—(பொறுமையுடன்) தம்பியர்காள்! தருமதேவதை நமக்குச் செய்திருக்கும் பெருங்கருணைத் திறத்தினை யுன்னுந்தோறும் என் தேகம் சிலிர்க்கின்றது.

இந்துஸ்தான் கெஜல்—சாப்பு.

உண்மையே உயிர்க்கு இணை
உற்றிடும் வழிக்குத் துணை (உண்)

வன்மை சேர்நெறி வாய்மையின் மொழி
வளமையானதே (உண்)

பொய்யுலகை மெய்யென் றெண்ணி
பேதையானரே (உண்)

சத்தியமே நித்தியம். சத்தியமே உயிர்த்துணையென்று தருமநெறி தவறுதொழுகும் உத்தமர்களுக்கு மலைபோல் வருந் துன்பம் பனிபோலாகுமென்னுந் தூய்மை வசனப்படி தருமந் தலைகார்த்துவிட்டது பார்த்தீர்களா? இதனினும் வேறு அத்தாட்சி வேண்டுமா? மனதிலொன்றும் வாக்கிலொன்றுமாக வைத்துக்கொண்டு புன்னகையோடு உறவாடி நம்மை வஞ்சித்து, பொருள்களை யபகரித்த துரோகி துரியோதனன் எண்ணம் ஒருபோதும் கைகூடாது. கைகூடுவதுபோல் பாவனை காட்டி, நீரோடு கூடிய உப்பைப்போல் நாளடைவில் உருவின்றியொழிந்து விடும். (அர்ச்சுனனை விளித்து) பார்த்தா! இன்னும் பார். "கிணறு வெட்டப்போய் பூதம் புறப்பட்டது" போல் என்ன அவமானத்தை யடைந்து விட்டான். அதுவன்றியும் காளமாமுனிவன் உயிரிழந்த பெரும்பழியையும் சுமத்

திக்கொண்டான். இனி சிறிதும் தாமதிக்கப்படாது. திரௌபதி நமது பிரிவாற்றுமை முனிவர் ஆஸ்ரமத்தில் என்ன கலக்கமுற்று வருந்துகின்றனளோ? வாருங்கள். நாம் விரைவில் செல்வோம். (அனைவரும் போகின்றனர்.)

---

அங்கம் I. காக்ஷி 3.

இடம் :—தௌம்யர் ஆஸ்ரமம்.

காலம் :—மாலை.

நடர் :—தௌம்யர், சந்திரசேகரன், கங்காதரன், திரௌபதி.

[தௌம்யர் தபசிலை தெளிந்து, சுற்றுமுற்றும் பார்க்கிறார்.]

தௌம்யர் :—சந்திரசேகராவ்! கங்காதராவ்!

கங்காதரன்
சந்திரசேகரன் } குருஜீ!

தௌம்யர் :—சிஷ்யர்காள்! பாண்டுபுத்திரர்கள் வந்துவிட்டார்களா?

சந்திர :—சுவாமின்! இன்னும்வரவில்லை. அதுவிஷயமாய் மாது திரௌபதியும் வருந்துகிறார்.

தௌம்யர் :—அப்படியா! (சற்று ஞானதிருஷ்டியில் பார்த்து, தனிமையில்) ஆம்! நல்லவர்க்கு நல்லதாகவே முடியும். குழந்தாய்! பாஞ்சாலி! அஞ்சற்க! அஞ்சற்க!! (கங்காதரனை நோக்கி) கங்காதராவ்! நமது பாண்டு புத்திரர்களுக்கு வேண்டும் பக்ஷணங்களை சித்தஞ்செய்து வைப்பாயாக.

கங்காதரன் :—பிரபுஜீ! சித்தப்படியே செய்கின்றேன்.

(பாண்டவர்கள் நச்சுப் பொய்கையைவிட்டகன்று தௌம்யர் ஆஸ்ரமம் அடைகின்றார்.)

பாண்டவர் :—முனிவர் பெரும ! நமஸ்கரிக்கின்றோம்.

(ஐவரும் தனித்தனியே நமஸ்கரிக்கின்றனர்.)

தௌமியர் :—(தருமரைப் பார்த்து) பாண்டு புத்திரரே! சென்ற விடத்தில் இப்படியும் தாமதித்து விடலாமா? குழந்தை பாஞ்சாலி வருந்தலுக்கிடமாய் விட்டதே!

தருமர் :—முனிவர் பெரும! "எண்காதம் போனாலும் தன் பாவம் தன்னோடே" என்ற வாக்கியத்தின் உண்மை எங்களுக்கே பிரத்தியக்ஷப் பிரமாணமாக முடிந்தது.

தௌமியர் :—(ஆச்சரியத்துடன்) என்ன விசேடம்? விவரமாகச் சொல்லும்?

தருமர் :—(நடுக்கத்துடன்) முனிபுங்கவரே! சொல்லவும் நாவெழவில்லையே. மனத்தூய்மையில்லா மாபாவி துரியன், அனைத்தையுமவனேயாண்டிட நினைத்து, இனத்தோடிருந்த எங்களை சூதால் வனத்துக்கேக வகையது செய்த, வஞ்சனை யாவுமறிந்ததன்றோ! மாதவரே! கலையெலா முணர்ந்த காதகதுரியன், நிலையிலா வாழ்வை நிலையெனக்கொண்டு காளமாமுனியால் வேள்வி செய்வித்து பொல்லாத பூதமொன்றைப் படைத்து எங்களை அல்லல்படுத்திக் கொல்ல வனுப்பினான். உத்தமர்க்கென்றும் உயிர்த்துணையாகும் நித்தியப் பரம்பொருள் நிறைபருள்செயலால் நஞ்சு ஜலத்தையருந்திடநேர்ந்து துஞ்சியே தம்பியர்சோர்ந்ததினாலே காளமாமுனிவன் ஏவியபூதம் கடுஞ்சினத்தோடு கடுகியே வந்து, எங்களைப் புரட்டிபுரட்டிப் பிணமெனமதித்து விரட்டிய முனிமேல் வெகுளியைக்கொண்டு அண்டகோளமும் அதிர்ந்திட முழக்கி காளமாமுனிவன் ஆவியைப் போக்குவேன் பாவியேயென்று கூவிச்சென்றது.

தௌமியர் :—(சாந்தமாய்) தருமபுத்திரரே! நீர் யாதொன்றுக்கும் துன்புறவேண்டாம். உண்மைக்கே தெய்வம் உயிர்த்துணையாகநிற்கும். இது ஒன்றே போதுமான அத்தாக்ஷி. பொல்லாத்துரியன் சொல்லைக்கேட்டு, கொல்லநினைத்த காளமாமுனிவன் அல்லல்பட்டு வல்லுயிரிழந்தான். தருமநந்தனரே! ஒன்றுபாரும்! அம்முனிவனேவியபூதம் சின

மோடு வருவதுகண்டு உங்களைப் பிணம்போல் செய்வித்தவர் யாவர்? மறுபடியும் உமது தம்பிமார்கள் உயிர்பெற்றெழ மகிமை வந்துற்றது எப்படி? யோசித்துப்பாரும். அணுவுக் கணுவாயும், எல்லைக்கு எல்லையாயும் புண்ணியபுருஷருள்ளும்புறமும் ஊடுருவிக் கண்ணிமை காப்பதுபோல் காப்பது அண்ணல் செயலன்றோ? நம்மாலாவது உலகிலென்னவிருக்கிறது? சத்தியமே உயிர்த்துணையாகக்கொண்டொழுகும் உத்தமர்களாகிய உங்களுக்கு ஒரு குறைவும் வந்துறாது.

தருமர் :—(வணக்கத்தோடு) சுவாமின்! தாங்கள் சொல்வது அவ்வளவும் உண்மையே. தெய்வ பலமுடையோர் திரிகிர்த்தியங்களையுஞ் செய்ய வுடையவரென்று பழமறைகள் சாற்றும். ஆகவே, திருவருட் கடாக்ஷத்தால் யாவரும் உயிர் தப்பினோம். (சகோதரர்களையும், பத்தினியையும் அருகழைத்து) தம்பியர்காள்! திரௌபதி! இனி நாம் வீணே காலங் கழிக்கப்படாது. வருடங்கள் பன்னிரண்டும் இன்னும் மூன்று தினங்களில் முடிவுபெறுகிறது. இனி அஞ்ஞாதவாசம். ஒருவருடம் எவர்களுக்கும் புலப்படாது எவ்விதங் கழிப்போமென்றுந் தெரியவில்லை.

அர்ச்சுனன் :—(விதானமாய்) அண்ணா! தைரியத்தைக் கைவிடாதீர்கள். எல்லாம்

கல்யாணி—சாப்பு.

பல்லவி.

ஈசன்செயலது போல நடைபெறும்
இன்பதுன்பங்கள் யாவுமிசையுறும் (ஈ)

அநுபல்லவி.

ஆசைமிகுதியால் அணுகிவருமெண்ணம்
அணுவுமாகுமோ அவனல்லால் திண்ணம் (ஈ)

சரணம்.

வீண்மனக்கவலை யேன்?—அமைப்பின்படி
தான்முடியு மெதுங்காண்—அவனிதனில்
தோணுங்கருவினில் ஆறுமமைந்துநாள்
தோறும்வருமன்றி வேறுவிளையுமோ (ஈ)

இறைவன் செயல்போல் நடைபெறும். ஆனால் எனக்கொரு யோசனை யுற்பவித் திருக்கின்றது. அது என்னவென்றாலோ? பாஞ்சாலம், சாளவம், விதர்ப்பம், பாகலீகம், விதேகம், தசாரணம், கலிங்கம், மகதம் இவைகளைப் பார்க்கினும் மிகவுஞ் சிறந்து விராடபுர மென்றோர் தேசமிருக்கின்றது. அது நமது எண்ணத்தைப் பூர்த்திசெய்தற்குத்தக்க புண்ணியதேச மென்பதற்குச் சந்தேகமில்லை.

**தருமர்** :—(ஆச்சரியத்துடன்) அப்படியா! நல்லது யோசிப்போம். (பீமனைப் பார்த்து) தம்பி பீமசேனா! உனது அபிப்பிராயமென்ன?

**பீமன்** :—(பணிவுடன்) அண்ணா! தருமசொரூபராகிய தமது அபிப்பிராயமெப்படியோ அப்படியே யானும் நடக்கச் சித்தமாயிருக்கின்றேன்.

**தருமர்** :—(நகுல சகாதேவரை நோக்கி) இளையோரே! உங்களெண்ணமெப்படியோ?

**நகுலன்** :—(வணக்கமாய்) ஞானக்கடலே! உமது திருவுளத்திற்கு மறுவளஞ் சொல்லப் பாத்திரரோ? தாங்கள் சொல்வதுபோல் செய்யச் சித்தமாயிருக்கின்றோம்.

**தருமர்** :—(குதூகலத்துடன்) தம்பிகாள்! பல்கோடி பிறவிகளினின்றுந் தப்பி, மானிடப்பிறவி பெற்றாலும் அவரவர் பழவினைக்கீடாக இன்பதுன்பங்களணுகுமென்பது அறிந்த அறிவுடையோர் கொள்கை. சாஸ்திர சம்மதமும் அதுவே. வருவதை மகிழுடன் அநுபவித்தே தீரவேண்டும் (அர்ச்சுனனை விளித்து) தம்பி தனஞ்செயா! நீ சொன்னதுபோல்விராடனிடம் போவதற்கு என் மனமும் இசைகின்றது. ஆனால் இக்கோலத்தை மாற்றாது சென்றால் தீதாகமுடியுமன்றோ?

**அர்ச்சுனன்** :—(பொறுமையுடன்) ஆம். அண்ணா! ஆம். தாம் சொல்வதுபோல் எவரேனும் நம்மைக்கண்டுவிட்டால் மோசமாகவேமுடியும், அதுவன்றியும் மீண்டும் பன்னிரண்டாண்டு வனவாசஞ்செய்யவும் நேரிடும். ஆதலால் அதற்குத் தக்கதந்திரஞ் செய்தலே முக்கியம்.

**தருமர் :**—(*சாந்தமாக*) தம்பி! எனக்கும் அவ்விதமே சந்தேக மேற்பட்டதால் உன்னிடஞ் சொன்னேன். இதுவன்றியும் நாம் இன்னின்ன தொழிலுடனிருந்து காலங்கழிக்கவேண்டுமென்பதையும் ஏற்படுத்திக்கொள்ளவேண்டுமன்றோ?

**அர்ச்சுனன் :**—(*விசாரத்துடன்*) அந்தோ!

சாவேரி—ரூபகம்.

பல்லவி

அண்ணா! தாங்களுங்கொண்ட எண்ண மென்மனமதைப்
புண்ணாகச்செய்ததே! புவியிலிதுவும் விந்தை! (அண்)

அநுபல்லவி

திண்ணார் முடிமன்னர்கள் துதிக்கச்செங் கோலேந்தும்
பொன்னார்கரத்தாலெது புரிக உம்மாலாகும்? (அண்)

சரணம்

நீதிமுறைதவறா நிறையா யிஞ்ஞாலமே!
நெறியிலுயர் தரும நிலைநேர் குணசீலமே!
தீதுறக்கண்டுமே தெய்வங்களித்ததோ?
தீரனார் தருமமது மெங்கே யொளித்ததோ? (அண்)

அண்ணா! கஷ்டமென்பதைக் கனவிலுமறியாத தம்மால் என்ன தொழில்செய்யவியலும்?

**தருமர் :**—(*இரக்கத்தோடு*) பார்த்தா! சகலமு முணர்ந்த நீ இவ்வாறு வருந்துவது தகைமையாமோ? பகலுக்குப் பின் இரவும், இரவுக்குப்பின் பகலும் வருவது ஸகஜமன்றோ? வறுமை வந்தகாலத்து பெருமையைச் சிந்தித்து வருந்துவது பேதமையன்றோ? என்பொருட்டு நீங்கள் வருந்துவதைவிட்டுவிடுங்கள். யானோ! கங்கபட்டனென்று பெயர் புனைந்துக்கொண்டு சங்கரனடியார் கோலத்தோடு சோதிடம் முதலிய வேதாந்த நூல்களாலும், என்னிடமிருக்கும் வெள்ளிக்கயிற்றின் வல்லமையாலும் விராடன் உள்ளத்தை மகிழச்செய்து தருமனுக்குற்ற துணைவனென்றும், அவர் வனவாசஞ் சென்றதால் இங்கு வர நேர்ந்ததென்றுஞ் சொல்லி, தந்திரமாய்க் காலங்கழிப்பேன். (பீமசேனனைப்

பார்த்து) தம்பி பீமசேனா! இடும்பன், பகாசுரன், ஜடாசுரன் முதலியோரை முறிய அடித்து மடியச்செய்ததுமன்றி, கந்தமாதன பருவதத்தில் இணையிலாத் திறனுடைய இயக்கர்முதல் இராக்கதர்களின் வேரைக்களைந்து வெந்நீர் வார்த்து தாமரை, செங்கழுநீர் முதலியமலர்களைக்கொணர்ந்து மாது திரௌபதியின் மனதைமகிழச்செய்து உலகில் நெடிய கீர்த்தியைநாட்டிய வீரா!

பூரிகல்யாணி—ஏகம்.

**கோபங் கொடிய தென்பார் குவலயத்திற் பெரியோர் சீரே!—அது குணங்கொண்டான் மெய்யின்ப உணவுண்டடைய நேரும் பேறே.**

கோபமேகுடிகொண்ட உன் மனத்தின்கண் சாந்தமெய்படி நிலைபெறுமோவென்று சந்தேகிக்கின்றேன்.

பீமன் :—(சாவதானத்தோடு)

மோகனம்—

பல்லவி.

பெரும் புகழ் தங்கிய தரும சொரூபமே!
புகலுமென் மொழிதனை செவிகொளல் வேணுமே! (பெ)

அநுபல்லவி.

பெருந்திகழ் வீரன்முன் புறம்பிடப் போகுமோ?
தரைதனின் மன்னர்தம் தகைமைய தாகுமோ? (பெ)

சரணம்.

அன்புடையோருக்கு அஞ்சலி செய்யுங் கரம்,
வன்கொடியோர்களை வாட்டத் துணியுந்திறம்;
பன்னெடு நாட்டினர் பகருமுமது அறம்:
நன்நடு சேரொளிர் நாதரே! நன்குறும். (பெ)

எல்லாந் தெரிந்த தங்களுக்கு யான் என்னசொல்லவல்லவுன்? "வலியவரிடத்து மொத்தான் மாட்டினும் வெகுளி காத்தல், பொலிவுசெயறமதென்னப் பொருந்துறு" என்றபடி ஒருபகைவன்தலைநீட்டிக் கொல்ல நெருங்கியபோது சினமென்னும் வாளைக் கைவிட்டால் அவன்கதி யென்ன

வாகும்? அண்ணா! தாம் அணுவும் சங்கேதிக்கவேண்டாம். யான் சுயம்பாகியாக வேடம்பூண்டு பாண்டவரிடம் பாக சாலியாக விருந்தவனென்றும், என் பெயர் பலாயன னென்றும்பகர்ந்து பரிவுடன் ஓராண்டு கழிப்பேன்.

தருமர் :—தம்பி மெச்சினேன். நீயே தனவான். நீயே குண வான். அர்ச்சுனா!

* நெடிய தகைமை கொண்ட திடவீரனே! விஜயநாமா!
படியிலடிமை செய்ய அடுக்குஞ் செய்கை யிதுவும் ஆமா?

திரிமூர்த்திகண் முதல் தேவர்களும் புகழ்ந்து கொண்டா டும் வல்லமையையுடைய நீ, ஒருவருக்கு கீழ்ப்படிந்து நடக்கக் காலம் வந்துவிட்டதே?

அர்ச்சுனன் :—(தைரியத்துடன்) அண்ணா! என்ன செய்யலாம். துன்பம் வந்த காலத்தும், இன்பமாகபாவித்தொழுகு தல் உத்தமரியல்பென்று பலகாலும் தாம் உரைப்ப தன்றோ? "விதைத்தது வேம்பாகவிருந்தால் கரும்பு யெப்படி விளையும்" சிந்தித்தலே யொழியுங்கள். யான் தேவருலகஞ் சென்றிருந்தபோது ஊர்வசியால் யெனக்கு நேர்ந்த சாபம் தாங்களறிந்தவையன்றோ! அதை எனது தந்தை தேவேந்திரன் விலக்கியபோது யான் அடைந் துள்ள உறுதிமொழியின்படி அலியுருவங்கொண்டு, பிரு கந்நளையென்ற நாமதேயத்தோடு விராடபுரமேகி, ஆடல் பாடல்களால் அவர்கள் மனதை யிளகச்செய்து, இட்ட பணிவிடைகளை திட்டமாய் புரிந்து தமது இஷ்டத்தைப் பூர்த்தி செய்வேன்.

தருமர் :—தனஞ்செயா! காலத்துக்கேற்றகோலமோ? ஹா—ம் (நகுலனைப் பார்த்து) நால்வர்க்கும் மேலவனுகப்பயின்று சாந்தமும், வீரமும் பொருந்தி விளங்கும் நகுலா! கவலை யற்று எங்களோடு சர்வதா களித்திருந்த நீ யெவ்விதம் வருடமொன்றை கழிக்கப்போகின்றாய்?

நகுலன் :—(பணிவுடன்) தந்தையினுஞ் சிறந்த தாணுவே!

தேசிகம்—ஆதி.

பல்லவி.

கருணை யிருக்குமட்டும்
கலங்குவேனே அண்ணா! (கருணை)

அநுபல்லவி.

சரணமே உளங்கொண்டு
சகலமுஞ் செய்வேன் தொண்டு (கருணை)

சரணம்.

அசுவபாகனாக அமைந்தற நெறிநின்று
வசையுரையன்றியே வாண்டுகழிப்பேன் நன்று (கருணை)

சிந்தையுறவேண்டாம். தமது திருக்கருணை நோக்கமிருக்கும்வரையும் யான் யாதொன்றுக்குந் தளரமாட்டேன். நான் அஸ்வசாஸ்திரத்தில் நன்கு பயின்றவனென்று தாங்களறிந்தவிடயம்? ஆகவே தாமக்கிரந்தி என்னும் பெயருடன் அந்த விராடனிடஞ் சென்று அசுவபாகனாகவிருந்து ஈராறு மாதங்களையும் இனிவாய்க்கழிப்பேன்.

தருமர் :—தம்பி! நீ மகாமதியூகி. உன்னாலுற்றகவலையும் ஒழிந்தது. (சகாதேவனைபார்த்து) இளைஞா! சாஸ்திரக்களஞ்சியமென்றும், நீதியின் பொக்கிஷமென்றும், சகலரும்புகழத்தக்க கீர்த்தியை வாய்ந்த நீ யெத்தொழிலைமேற்கொண்டு விராடபுரமேகுவாயோ?

சகாதேவன் :—கருணைக்கடலே!

இந்துஸ்தான்—ஆதி.

பல்லவி.

அண்ணல் செயலது போலாகுமே—அண்ணா! (அண்)

அநுபல்லவி.

எண்ணித்துணிந்தபின் உன்னிவருந்துதல்
புண்ணியா நீதியின் வண்மையதாகுமோ? (அண்)

சரணம்.

பசுகளைக்காத்திடும் பண்டிதனாகவே
இசையுடன் ஆண்டுமே இருந்திடுவேனெதும் (அண்)

ஒன்றைச்செய்வதாக வொப்புக்கொண்டு பிறகு அதை சிந்தித்து வருந்துதல் தருமநீதிக்கு முரணாகவல்லவோ முடியும். நகுலண்ணாவைப்போல் நானும் தந்திரபாலனென்று பெயர்புனைந்துக்கொண்டு பசுக்களைக்காக்கும் பண்டிதனென்றுபகர்ந்து, நம்மைசகலவிதத்திலுங்காப்பாற்றி இரட்சிக்கும் பரம்பொருளின் திருவருட்பேற்றால் விராட பதிக்கு எனதுவல்லமையைக்காட்டி மனதை மகிழ்ச்செய்து ஓராண்டுகழிப்பேன். எனக்காக கலக்கம்வேண்டாம்.

**தருமர்:**—(**கனிவுடன்**) உத்தமம்! உத்தமம்!! (திரௌபதியைப் பார்த்து இரக்கத்தோடு) கன்னிகாரத்தினமே! நீ எவ்விதம் அன்னியரிடமேகி, காலங்கழிக்கப் போகின்றாயோ? அறியேன். அன்னப்பெடையே! "அரசமரத்தைப் பிடித்தது பிள்ளையாரையும் பிடித்தது" போல் எங்களால் நீயும் இந்த துன்பம் அனுபவிக்க நேர்ந்துவிட்டதே.

**திரௌபதி:**—(**தாழ்மையுடன்**) பிராணபதி!

ஏதுகுலகாம்போதி—ரூபகம்.

கண்ணிகள்.

பதியே! இந்தவிதமாய் மனஞ்சிதறல் நன்றதாமோ?
விதியா ரிட்டபடியே வந்து விளையாமலே போமோ? (ப)

படியாண்டிடும் முடிமன்னரே யடிமைப் புகும்போது
அடியாட்கிது கொடிதாகுமோ? திடங்கொள்ளுவீர் மனது (ப)

நல்லார்க்கொரு பொல்லாங்கது நேரிலனுவாகும்,
எல்லாம்வல்ல யிறைவன் நமக்கென்றுந் துணையாகும். (ப)

புருஷசிங்கங்களாகிய நீங்களே அடிமைப்புக வெண்ணிய போது என்றும் அடிமைசெய்ய வடிவுகொண்ட பேதைப் பெண்ணாகும் என்பொருட்டு வருந்துவதேதுக்கு? நான் விராட பத்தினியாகும் சுதக்கணையிடஞ்சென்று பணிப்

பெண்ணாக ஏவல்செய்ய யிசைவேன். என்னை யாரென்று கேட்டால் நான் ஐந்து கந்தர்வர்களுக்குகந்தவளென்றும், எவரேனும் என்மேலிச்சையுற்றால் அவர் தலை யிருபிளவாகு மென்றும் பயமுறுத்தி அவர்களிட்ட செயல்களை இனிவுடன புரிந்து திருவருளைச் சிந்தித்த வண்ணமே எனது காலத்தைக் கழிப்பேன். எனக்காக வருந்துதலை விட்டு விடுங்கள்.

தருமர் :—திரௌபதி. உன் புத்திக்கு மிகவும் மெச்சினேன். மாதரசி ! மற்றொன்று நன்குகவனிக்கவேண்டும். நமக்கு ஏவல்புரிபவரிடம் நாம் ஏவல்செய்கின்றோமே யென்று சில சமயம் மயங்கிவிடப் போகிறாய். மனதை திடப்படுத்திக் கொள். நெல்லிற்பிறந்த பதரொக்கும் அற்பர்கள் யாரேனும் ஏதேனுஞ் சொல்லிவிட்டால் பதறாதே. "வெகுளி காத்தலற" மென்பதையும் 'அடக்கமமரருளுய்க்கு' மென்பதையுஞ் சிரமாகக்கொள். தலைவியின் வாய்மொழி தவறாதே. நற்காலம் வருமளவுங்காத்து, சிறியபாம்பேனும் பெரியகோலைக்கொண்டே வாட்டவேண்டுமென்றுபொறுமையோடிரு. இதுவே யான் சொல்லவிருந்த முக்கிய விடயம்.

திரௌபதி :—என் ஆருயிர்த் துணைவா ! தமது திருவாக்கைச் சிரமாகக் கொண்டு கடமையை நிறைவேற்றுவேன்.

தருமர் :—முனிவர் பெரும! நாங்கள் ஒருவருடங் கழிக்கவேண்டிய அஞ்ஞாத வாசத்திற்குத் தக்க உபாயத்தை அனைவரும் ஏற்படுத்திக்கொண்டோம். ஆகவே தேவரீர் திருவுளம்பற்றி விடை கொடுத்தனுப்பவேண்டும்.

தௌமியர்:—சத்தியமே நித்தியமாகக்கொண்ட உத்தமர்களே!

சாவேரி—ஆதி.

பல்லவி.

புகழே பெறுவீர்கள்
மகிழார் புண்ணிய மிகுசீர் மன்னரே ! (புக)

அநுபல்லவி

ஜெகமேயாள சுகமேநல்கும்
பகையோர் கெடவே, நகைநேர் படவே (புக)

சரணம்.

மலைபோல் வரினும் பனிபோலாகும்
நலம் பொங்கிடவே தலந் தங்கிடவே (புக)

சுந்தரம்பன்னராகிய உங்களது புத்தி கூர்மைக்கு மெத்த வும் மெச்சினேன். உங்களுக்கு ஒருகுறையும் வந்தணு காது. மலைபோல்வந்து பனிபோலகலும். (பீமசேனனைப் பார்த்து) பீமசேனா! "கூரம்பாயினும் வீரியம் பேசேல்" என்னும் முதுமொழிப்படி இடம் பொருளேவலென்பதைச் சிந்தித்து, கொடிய கோபத்தை யடியோடு ஒழித்துவிடல் வேண்டும். உங்களது பகைவர்கள் மீன்குத்திப் பறவை போல் காத்துக் கொண்டிருக்கின்றார்களென்பது நீங்கள் நன்கு அறிவீர்கள். அவர்கள் மாய்கையால் உங்களைச்சோ திக்க யாரேனும் வலியவந்து வாதுபுரிய வரினும் வரு வார். அத்தருணம் சர்வசாக்கிரதையாய் மெலிந்தவர் போல் நடித்து வாக்காலும் செய்கையாலும் வெளிப்படுத் தாமல், வெகுளியைக் காத்து குகையிலுறங்குஞ் சிங்கத் தைப்போல் ஒரு வருடத்தைக் கழிக்கவேண்டும். தரும நந்தனரே! உமது தந்தை தென்றிசைக் கடவுள் தந்தரு ளிய யந்திர மந்திர பலத்தால் அந்தணனைச் சிந்தையிற் கொண்டது அளவிலா ஆனந்தம். பத்தினி பாஞ்சாலி யை நெடுந்தூரம் நடத்திச் செல்லாதீர்கள். சுகமாய்ப் போய்வாருங்கள்.

பாண்டவர் :— இங்கிலீஷ் நோட்.

மாமலர் பணிந்தோமே
மாதவ மணிந்தோமே
மாநிலம் பிறந்தோமே
மாவனஞ் சிறந்தோமே

சீர் மொழிதனை சிரமே
சீர் கொளவுநந் திறமே
சீர் புகழ் மிக பெறுமே
சீர் விடையது தாருமே.

தௌமியர் :— சுகிபவா! சுகீபவா!! சுகீபவா!!!

## அங்கம் II. காக்ஷி 1.

இடம்:—விராடபுரத்தை யடுத்த காளிகாதேவி ஆலயம்.

காலம் :—முற்பகல்.

நடர் :—பாண்டவர்கள், திரௌபதி.

[ஆயுதங்களை அடக்கஞ் செய்கின்றார்கள்]

தருமர் :—தம்பிகாள்! விராடதேசம் சமீபித்து விட்டது. இனி நாம் சிறிதும் தாமதிக்கப்படாது. இன்றோடு பன்னிரண்டாண்டும் முடிவுபெறுகிறது. தம்பி அர்ச்சுனனியம்பியவாறே, நமது ஆயுதங்களை யெல்லாம் வன்னிமரத்தில் வைத்துவிட்டு உருமாறிச்செல்வோம்.

[தருமர் தவிர நால்வர்களும் ஆயுதங்களை வன்னிமரத்தில்வைத்து விடுகிறார்கள்.]

தருமர் :—(பீமனைப்பார்த்து) தம்பி பீமசேனா! நீங்களனைவரும் சற்று ஒருபுறமாக இருங்கள்.

பீமன் :—அப்படியே அண்ணா!

தருமர் :—(எமதர்மரைப்பிரார்த்திக்கிறார்)

அறநெறி நின்றார் தம்மை யன்பொடு புகழார் கைலை
இறைபதஞ் சேர்த்து இன்ப மெய்திடச் செய்யுந் தாதாய்!
சிறகிலாப் பறவை போலே சேயனுளத்திற் கொண்ட
குறைகளை நீடுவீ ரின்றே குறைகழல் போற்றி தேவே

பிதா! உமது பொற்பாத கமலங்களுக்கு அடியேன் நமஸ்கரிக்கின்றேன். நிகரிலாத்திறலுற்று, புகலொணாத் தகைமைவாய்ந்த எனது தம்பியர் தங்களாயுதங்களை எல்லாம் இதோவிருக்கும் வன்னிமரத்தில் வைத்து விட்டது போல் யானும் வைத்துவிட்டு விராடபுரத்திற்குச் செல்ல விசைந்தேன். கருணாநிதி! ஓராண்டு கழியுமளவும் ஒருவரும் கவர்ந்துச் செல்லாவண்ணம் உமது காவலிலிருக்க வேண்டும். நிரபராதிகளாகிய எங்களுக்கு முன்னம் உயிர்த்துணையாக விருந்ததுபோல், என்றும் நிறையாக நிற்கவேண்டும். தயாநிதே! இடையில் யெமக்கு வேண்டு

மென்ற அவசரமுடைத்தாயின், தம்பி அர்ச்சுனனும் யானுமே யெடுக்கப் பாத்திரராகவேண்டும். வேறு யாரேனு மெடுக்க விசைந்தால் அரவுருவெடுத்து பய முறுத்தல் வேண்டும். இதுவே யெனது விண்ணப்பம். தாங்கள் அங்கீகரித்த உண்மையை அசரீரியாக உரைக்க வேண்டும் அண்ணலே!

**எமன்** :—(அசரீரியாக) தரும! அஞ்சற்க. உனது இஷ்டபடியே செய்ய விசைந்தோம்.

**தருமர்** :—தன்யனுனேன் தயாநிதி! [மறைவாயிருக்கும் தம்பியரையும், திரௌபதியையும் அழைத்து] தம்பிகாள்! கண்மணி திரௌபதி! நீங்களனைவரும் உங்களனுஷ்டானங்களை யெல்லாம் முடித்துக் கொண்டு, அவரவர்கள் கொண்ட அபிப்பிராயத்தின்படியே உருமாறி அமைதியோடு விராடபுரம் வாருங்கள். யான் முன்பு செல்கின்றேன்.

---

## அங்கம் II. களக்ஷி 2.

**இடம்** :—விராடன் கொலுமண்டபம்.

**காலம்** :—முற்பகல்.

**நடர்** :—விராடமன்னன், மந்திரி, பிரதானி சேனுதிபதி, சேவகர் போர் வீரர், மெய்காப்பாளர் முதலியோர்.

**விராடன்** :—(கைகுவித்து நின்றவண்ணமாய்.) அகண்டபரிபூரண சச்சிதானந்த நின்மல நிஷ்கள நிராதார நித்தியானந்த பரம்பொருளே! என்றும் உமது திருப்பாதங்களை இதய கமலத்தில் நன்றுற்றுப்படியேனது தேசம் இவ்விதமே இன்புற்று, பகைவர் பயமற்று, பல்வித செல்வங்களும் பெற்று நல்லறஞ்செழிக்க வல்லருள் பாலிக்க வேண்டும் நாதா!

[விராடன் மந்திரி முதலியோர்களுடன் வீற்றிருக்குந் தருணம் தருமர் உருமாறி கங்கபட்டர் என்னும் நாமத்தோடுவருகின்றூர். சேவகன்விரைந்து வந்து அரசனிடம் தெரிவிக்கிருன்.]

**சேவகன்** :—மண்டலேஸ்வரா! யாரோ ஓர் மாதவர் தமது சமுகத்தை நாடிவருகிறார்.

**விராடன்** :—அப்படியா!

[விராடன் முதல் யாவரும் உபசாரத்தோடு எதிர்நோக்கி இருகைகளையும் குவித்தவண்ணமாக]

ஏதுகுலகாம்போதி—சாப்பு.

பல்லவி.

பெருந் தவமே இத்ததிதாம்
தரிசனந் தரப் பெற்றதும் யாம் (பெ)

அநுபல்லவி.

பெருமை போடிந்தப் புவிசெழித்தது
அருமலரிணையது பதித்தது (பெ)

சரணம்.

பிறவி துன்பம்போக நல்ல
பொருளே செய்யவல்ல
பரவுஞானப் பழம்பொருளே
திறமுயர்பதம் பெறவருளே (பெ)

சுவாமின்! வரவேண்டும். எனது முன்னோர்கள் தவமோ அல்லது எனது புண்ணிய வசமோ? தாங்கள் இங்கெழுந்தருளப் பெற்றது? திருவுளம்பற்றி இவ்வாசனத்தில் அமர்ந்தருள வேண்டும். [அமர்ந்த பின்] சுவாமின்! யாது காரணம் பற்றி அடியேனை நாடி வந்ததோ?

**கங்கபட்டர்** :—[கருணைரசந்ததும்ப] விராடபதி! திருவருட் செயலால் யான் இவ்வுருகொண்டு காலங் கழிக்கின்றேன். தமது கீர்த்திப் பிரதாபத்தைக் கேட்டு சிலகாலம் தம்மிடத்தில் இருக்கலாமென்று மனமுற்றதால் இங்குற்றேன்

**விராடன்** :—[இரக்கத்தோடு] சுவாமின்! கிருதார்த்தனானேன். இன்றே எனது இல்லம் தூய்மையடைந்தது. திருவுளச் சம்மதம் எப்படியோ அப்படியே. இருக்கட்டும் [சற்று செவியுற்று மந்திரியை நோக்கி] சுமதீ! என்ன உரத்த சப்தம் ஒன்று கேட்கின்றதே.

மந்திரி :—ஆம். அண்ணலே! என்காதிலும் அப்படியே த்வனிக்கின்றது. [காவலனைப் பார்த்து] காவலா! அதுவென்ன சப்தம்? கண்டறிந்து வா.

காவலன் :—சித்தம் அப்படியே!.

[பீமன் பலாயனன் என்ற நாமதேயத்தோடு சுயம்பாகியாக உருமாறி கையிற் கரண்டியை ஏந்தியவண்ணம் சபைமுன் வருகிறான்]

பீமன் :—மண்டலேஸ்வரா! அடியேன் தண்டம் சமர்ப்பிக்கின்றேன்.

விராடன் :—நீ யார்? என்னகாரணமாக இரைச்சலிட்டுச் செல்கின்றாய்.

பீமன் :—பிரபு! யானோர் சுயம்பாகி. என்பேர் பலாயனன். நான் நெடுநாளாகப் பாண்டவர்களிடத்தில் சுயம்பாகியாகவிருந்து நீண்டதோர் கீர்த்தி பெற்றவன். அன்னோர் விதிவசத்தால் பதியைவிட்டு வனமேக நேர்ந்தமையால் என்கதி இவ்விதமாயிற்று. நீதியும், காருண்யமும் நிறைந்த தமது சமூகத்தில் சுயம்பாகியாக விருக்கச்செய்தால் சுகஜீவியாக விருப்பேன்.

விராடன் :—(மந்திரியைநோக்கி இரகசியமாய்) சுமதி! இந்த சுயம்பாகியின் உருவத்தைச் சற்றுவுற்றுப் பார் ஜெயவீரசிங்க போலல்லவோ வாய்ந்து விளங்குகின்றான். திரண்ட தோள்களும், பரந்த மார்பும், சிறந்த கண்டமும் அமையப் பெற்ற இவன் போர்வீரனைப் பொருந்துவானென்று மதிக்கின்றேன்.

மந்திரி :—ஆம். எனக்கும் அப்படியே ஏற்படுகின்றது. ஆனால் நமது கருத்திற்கு இசைவானோ வென்றுதா[illegible] கின்றேன்.

விராடன் :—சுயம்பாகி! நீ எமக்குச் சேனாதிபதியாய் இருக்கச் சம்மதிப்பாயா?

**பலாயனன்** :—பூபதி! தாங்கள் மதித்ததுபோல் யான் தக்க பலவானேயாவேன். ஆனால் தற்போது என் தேகம் மெலிவடைந்து சொற்ப சக்தியைக் காட்டுவதால் தங்கள் சமுகத்தில் சேனாதிபத்யம் வகிக்க பாத்திரனல்ல. உத்திரவானால் இன்னும் எங்கேனுஞ் சென்று எனது காலத்தைக் கழிப்பேன்.

**விராடன்** :—பலாயனா! ஏன் அவசரப்படுகிறாய். உன் உருவத்தைக் கண்டு அவ்வாறுரைக்க ஆனதேயன்றி ஸ்திரமாகச் செய்யவேண்டுமென்று வற்புறுத்தவில்லையே. (தனிமையில்) என்ன அறியாமை, மந்திரி! இந்த பலவானைப் பாகசாலைக்குத் தலைவனாக யிருக்கச் செய்வாய்.

**மந்திரி** :—அப்படியே.

[அர்ச்சுனன் பேடி உருவங்கொண்டு பிருகந்நளை என்ற நாமதேயத்தோடு தன்னுடன் வந்த திரௌபதி என்னும் விரதசாரணியை ஓர் புறமாக இருக்கச்செய்து விராடன் சபைக்கு வருகிறான்.]

**பிருகந்நளை** :—ஐயா! அரச சமுகத்திற்குப் போகலாமா?

**காவலன்** :—அம்மா! உத்திரவாகட்டும். (சேவகன் அரச சமுகத்திற்குப் போய் மந்திரியைநோக்கி) மகாப்பிரபு! யாரோ ஒரு மாது சிரோன்மணி தமது சமுகத்தை நாடி வந்திருக்கின்றார்.

**மந்திரி** :—அப்படியா? இங்கு வரச்செய்.

**பிருகந்நளை** :—பூபாலா! நமஸ்கரிக்கின்றேன்.

**விராடன்** :—(திகைப்புடன்) இதென்ன புருடனா? பெண்ணா?

**மந்திரி** :—(நிதானித்து) பார்த்திபா! நடனப் பெண்ணென மதிக்கின்றேன்.

**பிருகந்நளை** :—ஆம்! ஆம்! நடனஞ்செய்வதற்கும் நன்கு அறிவேன். பூமன்னர்க்கினிய பாவையர்களுக்குப் பூமாலைதொடுத்துப் புகழுடன் தருவேன். பொங்கிடு மணத்தில் மங்கையர் யிசையுடன் சங்கீதம்பாட கற்பிக்கத் தெரிவேன்.

விராடன்.—ஓ! ஹோ!! சங்கீத நடனமங்கையோ? நன்று நன்று (மந்திரியை நோக்கி) மதியூகி இப்பெண்மணியை நமது அந்தப் புரத்திற்கு அனுப்பி, கண்மணி உத்திரைக்கு நல்ல பாடல்கள் கற்பிக்கச்செய்வாய்.

மந்திரி :—சித்தம். அப்படியே செய்கின்றேன், (நிருபமெழுதி காவலனிடம் தந்து) இந்தப் பெண்மணியை நமது அந்தப் புரத்து தாதித்தலைவியிடம் விடுத்து இந்த சீட்டையும் கொடுத்து வருவாயாக.

காவலன் :—பிரபு! ஆக்கினைப்படிபோ.

[நகுலன் தந்திரபாலனென்றும் சகாதேவன் தாமக்கிரந்தி யென்றும் பேரமைத்துக் கொண்டு விராடனிடம் வருகின்றனர்.]

விராடன்:—(திடுக்கிட்டு இருவரும் கைகூப்பி நிற்பதைக்கண்டு) சிறுவர்காள்! நீங்கள் யார்? எங்கிருந்து வந்தீர்கள்? உங்களுக்குநேர்ந்ததென்ன? பயப்படாமல் சொல்லுங்கள்?

தந்திரபாலன் :—மணிமுடி துலங்கும் மகிபா! என்பேர் தந்திர பாலன். எனது துணைவன்பேர் தாமக்கிரந்தி. நாங்கள் நெடுநாளாகப் பாண்டவர் சமஸ்தானத்தில் அஸ்வங் களுக்கும், பசுக்களுக்கும் அணுகும் பிணிகளை யகற்றும் பண்டிதர்களாக விருந்தோம். காலக்கொடுமையால் அன்னார் காட்டுக்குப் போகநேர்ந்துவிடவும், எங்கள் அருமைதெரிந்து ஆதரிப்பவரின்றி தங்கள் கருணைப் பிரதாபத்தைக் கேட்டு, இங்குற்றோம். இனி தேவர்சித்தம்.

விராடன் :—சிறுவர்காள்! நீங்கள் யாதொன்றுக்கும் அஞ்ச வேண்டாம். உங்களெஜமானரும் தரும புத்திரரிடம் இருந்த பாவனையாகவே இவ்விடத்தும் நன்மை பெறுகும்.

தாமக்கிரந்தி:—கருணைக்கடலே தங்கள் திருவாக்கைச் சிரமாகக் கொண்டோம். சித்தப்படி செய்வோம்.

விராடன் :—(மந்திரியைநோக்கி.) சுமதி! இச்சிறுவர்கள் மகா புத்திமான்கள். இவர்கள் மனதிற்கு ஒரு குறைவும் வாரா மல் அவர்களிஷ்டப்படியே செய்விப்பாய்.

மந்திரி :—சிறுவர்காள்! வாருங்கள் (இருவரையும் அழைத்துச் செல்கிறார்.)

விராடன் :—(கங்கபட்டரைப்பார்த்து உபசாரத்துடன்) சுவாமின்! கறங்குபோல் சுழலும் இக்குரங்கு மனதை ஒருங்கு நிறுத்த ஒருபாய முரைக்க வேண்டுதும்.

கங்கபட்டர் :—குணக்கடலே! நீர் வினவியது அரிய பெரிய விடயமே. அஃது மோக்ஷசாதன ஆ[illegible]யடைதற்கு முதற்[illegible]யேயாகும். அடியேனுக்குப் போதுமான அநுபோகமில்லாவிடினும், தெரிந்தமட்டுஞ் சொல்ல விழைகின்றேன். மன்னா! இம்மனதை ஒருவழி நிறுத்துவதென்றால் சர்வபரித்தியாகஞ் செய்தவர்க்கு சாதாரணம் அதாவது அணுபோல்வதாம். சதா விஷயவாசனையில் உழல்பவர்க்கு மலைபோல்வதாம். காரணம்: மனமோ ஆசையோடுகூடிய வேங்கைக்குச் சமானமானது. ஐம்பொறிகளின் ஆதாரவைக் கொண்டு சஞ்சரிக்கும் தன்மையுடையது அதுவன்றியும் தானல்லாததைத் தானென்னும் அபிமானங்கொண்டு பொன், பூண், வீடு முதலியன நம்மதென்று அஞ்ஞான வழியில் செல்லும் மியல்புடையது. அத்தகைய பற்றுக்கோளுடைய ஆத்மாவானது மோக்ஷமடைய ஒருபோதும் வழியேற்படாது. ஆராயுமிடத்து இயம நியமாதி சாதனங்களைக் கைக்கொண்டு சிறிது சிறிதாக, வாயுவை நிறுத்த வகையுண்டானால் மனமும் நிற்கும். அதுவன்றியும்

ஓடும் பொன்னு முறவும் பகையுமோர்
கேடுஞ் செல்வமும் கீர்த்தியு நிந்தையும்
வீடுங் கானமும் வேறற நோக்குதல்
கூடுந் தன்மை கொளுமன நன்மனம்

மின்போல் தோன்றி யழியும் ஓட்டையும், பொன்னையும், உறவையும், பகையையும், வீட்டையும், காட்டையும், சமமாகநோக்குகின்ற மனமே மோக்ஷ சாதனப் பயிரைவளர்க்கும் மேகமாம். மனதைப் போனபடிவிடாது தடுத்துக் கொண்டால், துவிதம்ஒழிந்து துரியநிலைதோன்றும். அஃது மற்றோர்சமயஞ்சொல்வோம். இத்தகைய அரியசாதனங்களுக்கு முரணாக நிற்பது காமக்குரோத மத மாச்சர்யமாதி

யவைகளே. அதை யடக்குந் திறலுடையவனெவனே அவனே மனமாதிகளையடக்கிப் பரமாநந்தப் பேரொளியின் பற்றுதலுடையவனுவான்.

விராடன் :—ஞானக்கடலே! தேவரீரைப் பார்க்கவும், அரிய விஷயங்களைக் காதாரக் கேட்கவும், தங்கள் மலர்ப்பாதங்களுக்கு என் இருகரங்களையுஞ் சேர்க்கவும் பெற்றது முன்செய்த பாக்கியமே. அடியேன் கொடுத்த சிரமத்திற்காக மன்னித்து அந்தப்புரமெழுந்தருளும்படி பிரார்த்திக்கின்றேன். [போகின்றூர்கள்.]

---

## அங்கம் II. காக்ஷி 3.

இடம் :—அரசியின் அரண்மனை.

காலம் :—நடுப்பகல்.

நடர் :—சுதக்கணை, தோழிகள் முதலியோர்.

[சுதக்கணை தாதிகொடுத்த நிரூபத்தை வாசித்துப் பார்க்கிறாள்.]

சுதக்கணை :—மனோன்மணி!

இந்துஸ்தான்—துக்கடா.

மனோன்மணியே முந்து வாயிலில் நிற்கும்
மாதை யழைத்து இங்கு வா வா வா (ம)

இணையிலாத சங்கீத நடனப் பெண்
இனி பெறுவோம், கனி வுறுவோம் (ம)
நனி மகிழ் தருக பெருக முன்னம்

நமது கோட்டை வாயிலில் எனது பேட்டிக்காக ஓர் நாட்டியப்பெண் வந்திருக்கிறாள். இங்கு கூட்டிக்கொண்டுவா.

மனோன்மணி :—அம்மணீ! அப்படியே.

பிருகந்நளை :—இராஜேஸ்வரீ! நமஸ்கரிக்கின்றேன்.

சுதக்கணை :—தையலே! நீதானு பிருகந்நளை என்பவள்? சங்கீதம் நடிகம் முதல் சகலமுந் தெரியுமா?

பிருகந்நளை :—ஆம். அம்மணீ! தெரியும்.

சுதக்கணை :—உன்னோடு நிற்கும் அப்பெண்மணி யார்?.

பிருகந்நளை:—மாதரசி! இப்பெண்மணி நெடுநாளாய் என்னுடன் இணைபிரியாதிருந்தவள். காலபேதத்தால் இக்கோலமாகப் புறப்பட நேர்ந்துமென்னை விடாது பின்பற்றி வந்தனள். அந்தப்புரத்து இராஜபத்தினிகளுக்கு கந்தமலர்கொண்டு ஆரங்கட்டி அலங்கரிப்பதின் மிக்க கைதேர்ந்தவள். அன்றியும் பாண்டவர் பத்தினியாகிய பாஞ்சாலி அம்மைக்கு சிலகாலம் பணிவிடை செய்திருந்தவள். தங்களுக்கும் பணி செய்யத்தகுந்தவள். கிருபைசெய்தால் இங்ஙனமே காலங்கழிப்பாள்.

சுதக்கணை :—சந்தோஷம். பிருகந்நளா! ஏதோ ஒரு கீதம் பாடு பார்ப்போம். [குமாரத்தியை நோக்கி]உத்தரா! நன்கு கவனி

பிருகந்நளை :—அம்மணீ! அப்படியே பாடுகிறேன். (பாடுகிறாள்.)

சங்கராபரணம்—சாப்பு.

பல்லவி.

தெய்வந் துணை செய்யுமே—நம்பினவர்க்கு
உய்யுங் கருணைப் பெய்யுமே (தெ)

அநுபல்லவி.

செய்ய மலரிணையை சிந்தை சினகரத்தின்
மெய்வருந்து மன்பர்க்கு மேன்மைபெற இகத்தில் (தெ)

சரணம்.

பசுவின்பிணிக்கு அதன்பாலே யவிழ்தம் போலே
அசையுமனதைக் கட்டி அடக்கி யறிவினாலே
தசையுறு மாலுண்டு தயங்காப் புவியின் மேலே
இசையுற நெறிநின்றோர்க் கிகபர மிரண்டிலே (தெ)

சங்கை யறுத்தாற் கின்பசாதனமே விதிக்கும்
பங்கமனற்றேக பளிங்கு நிலை பதிக்கும்
அங்கையில் நெல்லிபோ லன்பருளங் கதிக்கும் (தெ)
துங்கலிங்காபித கங்காதரன் துதிக்கும்

உத்தரை :—அம்மா! அன்று நமது சிங்காரமண்டபத்தில் நிகழ்ந்த சங்கீத இசைகளுக்கும், இந்த மங்கையின் குரலோசைக்கும் எங்கேயோ யிருக்கின்றது. குழல், யாழ் முதலிய அரிய தொனிகளையும் உரிமையாகச் சொல்ல ஆகவில்லையே. [தாழ்மையுடன்] தாயே! இப்பாவையிடம் பாடல் கற்க ஆவலாகிறதம்மா?

சுதக்கணை :—உத்தரா! உனக்குக் கற்பிக்கும் பொருட்டே, இக்கன்னிகாரத்தினத்தை உனது தந்தை இங்கனுப்பியது. பிருகந்நளா!

காபி— ஆதி.

பல்லவி.

நடன சங்கீத கியான
மங்கையே! எழின் மங்கையே! (நட)

அநுபல்லவி.

நங்கையே! சீர் தங்கமே!
துங்கமே! சிங்காரமே! (நட)

சரணம்.

தடமுந்தன் பாடல் கற்க
சாறுவல் கொண்டாண் மிக்க
திடமுயர் கீர்த்தி புக்க
தேன் மொழியி ஞளேதக்க (நட)

எனது குழந்தை உத்தரைக்கு கொஞ்சமே பாடத்தெரியும். ஆகவே உன்னிடம் நன்றாய்க் கற்கவேண்டுமென்று மன்றாடுகிறாள். அவளிஷ்டத்தைப் பூர்த்திசெய்வாயாக.

பிருகந்நளை :—அம்மா! தங்கள் திருமொழிக்கு மறுமொழி சொல்வேனோ? சித்தப்படியே செய்கின்றேன்.

சுதக்கணை :—குழந்தாய்! இப்பெண்மணியை வசந்த மண்டபத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் உன்மனதிற் கிசைந்தபடியே கற்றுக்கொள்.

[உத்திரையும், பிருகந்நளையும் சுதக்ஷணை யிடம் விடைபெற்று செல்கின்றார் கள்.]

[விரதசாரணியை நோக்கி] விரதசாரணி! நீ வனஜாக்ஷி மஞ்ஜுள்மணி இவர்களுடன் நந்தவனத்திற்குச் சென்று நல்ல நறுமலர்கள் கொண்டுவந்து சந்தையாக சரந் தொடுத்து பந்தியில் வைத்துவிட்டு அந்தப்புரத்திற்கு வந்தழை! யான் செல்கின்றேன். (போகிறாள்.)

**விரதசாரணி**:—அம்மணீ! சித்தப்படியே.—(தனிமையில் கைகுவித்த வண்ணமாய்). அருட்கடலே! அண்ட புவன சராசரங் களுக்கும் அருளொளியாயிலங்கும் ஆரமுதே! நல்லார்க்கு நடுநாயகமாய் சிறந்து யிடர்களையும் எம்பெருமானே! "வினைவலியுந் தன்வலியு மாற்றான்வலியுந் துணைவலியுந் தூக்கிச் செயல்" என்று பெரியார் கூறியுள்ளபடி கடைசியாக விருந்த துணைவலியுந் துலைந்து தனிமொழியில் நின்றேனே. பக்தவத்ஸலா! பரந்தாமா! பாற்கடல்வாஸா! சற்குணா! ஜனார்த்தனா! எனது அரிய மானத்தைக்காத்து ஆதரித்த ரக்ஷகா? நிரபராதியாய் நின்ற நான் உமது திருவடியே துணையாகக்கொண்டு மலர்வனம் செல்கின்றேன். (போகிறாள்.)

## அங்கம் III. காக்ஷி 1.

இடம் :—உத்தியானவனம்.

காலம் :—மாலை.

நடர் :—விரதசாரணி, வனஜாக்ஷி, மனோன்மணி முதலியோர்.

[விரதசாரணி, மனோன்மணி, வனஜாக்ஷி இம் மூவரும் மலர்கொய்துக்கொண்டிருக்குந் தருணம் கீசகன் அணுகுகிறான்.]

இந்துஸ்தான் பியாக்—ஆதி.

விரதசாரணி :—மலர்வனம் வந்தோம் மாதரே! பாரீர்
மலர் கொய்திடுவோம் மகிழுடன் வாரீர்

மனோன்மணி:—பலவித ரோஜா பாரிஜாதமே
பறித்து சரந்தொடுப்போம் பரிவுடன் நாமே

விரதசாரணி :—நிலமதிலுயர் சீர் நின்மலன் பூசை
தலமாற்றிடுங் கொன்றை தும்பையின் வரிசை

வனஜாக்ஷி :— உளமகிழுற்றிட ஓங்கிய மாதன
வளமதைப் புகலவுமாகுமோ சான்
நலமிகுந்திடும் நறுமலர்சாலை
நிலையிலுற்றிட நெறி தருஞ்சோலை

வனஜாக்ஷி :—விரதசாரணி! நீ அங்குமிங்குமாக ஓடி தேகத்தை அலட்டிக்கொள்ளாதே. இங்கிருக்கும் மலர்களைமாத்திரம் கொய்துக்கொண்டிரு. நாங்கள் நாலு பக்கத்திலிருக்கும் நறுமலர்களை கொய்துக்கொண்டு வருகிறோம்.

[கீசகன் ஒருபுறமாக விருந்து விரதசாரணியின் பேரழகைக்கண்டு வர்ணிக்கின்றான்.]

கீசகன் :—ஆ! ஹா!! சித்திரப் பதுமையோ! செந்திருவோ? பத்தரை மாற்றுப் பசுந்தங்கமோ? (சற்றுபொறுத்து)

அன்று. அன்று. எல்லா உறுப்புகளும் அமையப்பெற்ற நங்கையே!

பியாகடை—ரூபகம்.

பல்லவி.

பூரணச் சந்திரப் பொலிவுற் றிலங்குமந்த
பொற்றொடி யாளாரோ (பூரண)

அநுபல்லவி.

ஆரணனருயர் சேர்தருந் துங்கமோ?
ஆரெழிலங்கம் அரும்பசுந் தங்கமோ? (பூரண)

சரணம்.

சீரெலா மொன்று சிறந்தொளிர்கூந்தலை
காரெனப் போகுமோ?—இந்தப்
பாரெலாம் பரிசா யளித்தாலும்
பல்லுக்கிணை யாகுமோ?
பாவை சீர்சொல்ல, நாவிலேன் நல்ல
காவிலார் கோலோ, பூபரித்தலோ? (பூரண)

பூரணச்சந்திரனைப் பழிக்கவந்தபாவை யாராயிருக்கலாம்? (உற்றுப்பார்த்து) ஓ! ஹோ!! சுதக்கணையின் தாதிகளும் வந்திருக்கின்றார்களே. இப்பெண்மணி யாராக விருக்கலாம்? (சற்று யோசித்து) ஆம். ஆம். அவர்களை விசாரித்தால் யாவும் வெளிப்படும். (மெதுவாக கையைத்தட்டி வனஜாக்ஷியை அழைத்து) பெண்மணி! உங்களோடு மலர் பறிக்கும் மங்கை யார்?

**வனஜாக்ஷி:**—திறல்வேந்தே! எமது தலைவி சுதக்கணையிடம் வண்ணப்பெண்ணாக வந்தமர்ந்து இன்று மூன்று தினங்களாயிற்று.

[மஞ்ஞன்மணியும் வனஜாக்ஷியின் சமீபத்தில் வந்துநிற்கிறான்.]

**கீசகன்:**—அப்படியா? (இரக்கத்துடன்) பெண்கள் ரத்தினமே! அப்பூங்கொடியுடன் சிறிது பேசவேண்டும்.

மனோன்மணி:—அதற்கென்ன? அப்படியே செய்யுங்கள். வனஜாக்ஷி! வா நாம் அரண்மனைக்குப் போவோம்.

வனஜாக்ஷி:—(கொஞ்சதூரம்வந்து கோபத்துடன் மனோன்மணியை நோக்கி) இரக்க மற்றவளே! நம்மோடு இணைபிரியாது வந்த விரதசாரணியை தனியேவிட்டுச் செல்வது தர்மமா?

மனோன்மணி:—போதும். அடக்கு. பலுக்காதே. செங்கோலுக்குமுன் சங்கீதஞ்செல்லுமா? உயிர்தப்பித் திரும்பிய தே ஒன்பதாமிடத்தில் குருவென்றறிநீ.

வனஜாக்ஷி:—அப்படியா? ஆனால் வா போகலாம். (இருவரும் அரண்மனைக்குப் போய்விடுகிறார்கள்.)

[கீசகன் விரதசாரணியைப் பார்த்து அவள் பொழுகை வர்ணிக்கிறான்.]

கீசகன்:—ஆ! ஹா!! வேலை! செலை! அல்லது பாலோடு விளைந்த ஆலோ! இவ்வாரணங்கின் கண்களை எதற்கு ஒப்பிட்டுச் சொல்வது? சர்வ பரித்யாகஞ்செய்த சந்யாசியரேனும் இப்பெண்மணியின், மின் போன்ற சாயலைக்கண்டால் சரணமடைவாரென்பதற் கென்ன சந்தேகம்? அடடா! கருநிறம்பொருந்திய கூந்தலா? அல்ல. அல்ல. மன்மதன் அன்னவ! செருக்கால் சிவபெருமான் மேல் கருட்டிவிட்ட வண்டாகிய நாணியானது நெற்றிக்கண் ஜ்வாலையை சகிக்கமுடியாது இப்பெண்மணியின் கூந்தலாகப் பின்னலிட்டுக்கொண்டதோ? ஆம். ஆம். ஒளிபொருந்திய நெற்றியின் மேல் சூரியபிறை சந்திரபிறை அமைந்திருக்கும் பொலிவோ? முன்னம் சூரிய சந்திரரை விழுங்கி மறுபடியும் உமிழ்ந்து வைத்தது போலல்லவோ விருக்கின்றது? அதற்குச்சார்பாக நெற்றியின்மேல் கட்டிவிட்டிருக்கும் சுட்டியானது வெள்ளிய சந்திரனை விழுங்க கரிய மேகத்தின்மேல் விரைந்து செல்லும் சிறிய பாம்பைப்போலல்லவோ விளங்குகின்றது? முத்துக்களைப் பழிக்கும் பற்களும் ஒன்றோடொன்று சண்டையிட்டெழுவதுபோல் வித்தியாசமின்றி விளங்கும். அத்யாச்சர்ய பொற் கலசங்களும், அலைகளையுடைய கருங்கடலைச்சூழப்

பெற்றநிலத்தை தலைச்சுமையாகக்கொண்ட ஆதிசேடன் ஆயிரம் படங்களால் அரசிறையிட்டது போல் மேலாக விளங்குகின்ற மேகலாபரணங்களும்; பசுந்தங்கத்தை தோற்கச் செய்யும் தேகத்தையும் வாய்ந்த இம்மாதரசி யைக்கண்டு மதிமயங்கியிருக்கும் என்னைப்பார்த்து மதன் என்னஞ்செய்கின்றனோ. (சற்றுப்பொறுத்து)வண்ணப்பெண் என்றறைந்து சென்றனரே அது பிசகு. அது பிசகு. முற்றிலும் பிசகு. விண்ணுலகப் பெண்களும் பொன் போன்ற சாயலுக்கு இணையாகமாட்டார்களே. நல்லது சமீபத்திற் செல்வோம். சந்தேகந் தெளிவோம். (விரத சாரணியை சமீபித்து) பொற்கொடியே! இப்பூங்காவில் நீ தனித்திருக்க வேண்டிய காரணமென்ன? உன்னோடு யாரும் வரவில்லையோ? மாலை வேளையாயிற்றே?

விரதசாரணி:—ஐயா! என்னோடு இரண்டு கன்னியரும் வந் திருக்கின்றார்கள். (தனியே) வனஜாக்ஷி! மனோன்மணி! எங்கே போய் விட்டீர்கள். மாலைவேளையில் சோலையில் மறைந்து கேலியா செய்கின்றீர்கள்.?

கீசகன்:—பூங்கொடி! கேலியா! கேலியல்ல! உனக்குற்ற ஜோலியைக்கண்டு விலகிவிட்டார்கள்.

விரதசாரணி:—(கோபத்தோடு) என்னோடு இந்தப் பரிகாச வார்த் தைகள் வேண்டாம். உமக்குரியாரிடம்போய் விளையாடும்.

கீசகன்:—தாங்கற்கரியதான தனபாரங்களையுடைய தையலே!

பூரிகல்யாணி—ரூபகம்.

பல்லவி.

பாங்குடன் மன மிளகுவாயே!
பாவையே! பூவையே! கோவையே! (பாங்)

அநுபல்லவி.

தாங்கற்கரிய தனபாரமே கொண்டு
பூங்காவிலுள்ள பூங்குயிலே! மயிலே! தையலே! (பாங்)

சரணம்.

அதரத்திலூறும் மதுரத்தேனையுண்டு
அகங்களித்திட வந்தேனுனைக்கண்டு
இதஞ் செய்திடில் சுகிர்த மிகவுண்டு
இனிவாய், கனிவாய்
இருவரு மின்புற தனியாய் (பாங்)

ரிங்காரஞ்செய்யும் வண்டானது மலரிற்றுளிக்கும் தேனைப் பருகப் பூங்காவில் வருவதுபோல் மலராகிய உன் வதன அதரத்திலூறும் மதுரத்தேனையுண்டு இதமடைய யிச்சை யுற்றேன்.

விரதசாரணி :—(கையைப் பிசைந்துக்கொண்டு) அடி பாவிகளே! என்னைக்காட்டிக் கொடுத்துவிட்டு காதத்திலா நிற்கின் றீர்கள்?

கீசகன் :—உன்னைக் காட்டிக்கொடுக்கவில்லை. நாட்டிற்கதிபதி யின் கூட்டுறவைக்கண்டு வீட்டிற்குப் போய்விட்டார்கள். சீற்றமேன்?

விரதசாரணி :—நீராரும்?

இங்கிலீஷ்நோட்.

நீர் யாரும், நீர் யாரும் நாடியேவந்த
வழியே போம் (நீர்)

சீரிலா திதுவே சொன்னேன் நானே
சுடும் கொடும் பவந் தொடும்
கெடு மதிதனை விடும் (நீர்)

அடாத நினைவே—படாத வினையே
விடாது உனையே—தொடாதே யெனையே
அருந்தவ மழிந்திடும்
பெரும் புகழ் ஒழிந்திடும் (நீர்)

உம்மை யார் கேட்டது? இந்த சக்கட்ட வார்த்தைகள் என்னிடம் வேண்டாம். ஹூம் ஹூ. யாரென்று பார்த் தீர்கள்.

கீசகன் :—வனக்குயிலே!' நானின்னா னென்று நீ இன்னும் உணர்ந்திலை போலும். அன்னப் பெடையே! நீ வண்ண மகளாகவிருந்து செயல்புரியும் பெண்ணணங்கு என் னுடன்பிறந்தாள். இவ்விராஜ்யமுழுதும் என்வல்லமை யால்தான் நடைபெறுகின்றது. என் பெயர் கீசகராஜ னென்பார்கள். உன்னோடுறையும் பெண்கள் ஒன்றுஞ் சொல்லவில்லையா?

விரதசாரணி :—இந்த வீண்வார்த்தைக ளெல்லாம் என்னிடம் வேண்டாம். "கிணற்றுத்தவளைக்கு நாட்டுவளப்பமேன்"?

கீசகன் :—ஆசைக் கிளியே! யோசிக்காமலே பேசுகிறாய்? இந் நாட்டு வளப்பத்தையறியாமலா மேட்டரசியிடங் கூட்டுற வானாய்? ஓ! ஹோ!! நாணங்காரணமோ? பூவே! சற் றுப்பொறு வென்றாலும் பொறுப்பேன்.

விரதசாரணி :—உமக்கென்ன வெறியா?

மத்திமாவதி—ரூபகம்.

பல்லவி.

சகல கலைகள் உணர்ந்த நீரும்
சாற்றுதல் நன்றோமோ! ஆமோ!! (சகல)

அநுபல்லவி.

அகலுமிந்த வாழ்வை நம்பி
அரு நரகிலாழ்தல் நன்றோ! (சகல)

சரணம்.

தகாதிதுவே, தகா செய்கையே
தையலர் மனம் நோயச் செய்வது
புகாநரகிற் கிடமென வேதம்
புகன்றிடும் மேதினிமெய்யா!
புரிவதுஞ் சரியல்ல ஐயா! (சகல)

உமதுகொல்லையில் பூத்தபூவா? ஹூ—ட. அம்மா அளவுகடந்து விட்டீர்போலும். அமுதமும் விஷமாகு மென்பதை மறந் தீரோ?

கீசகன் :—மாதர்க்கரசி !

காபி—ஆதி.

மோடி செய்யாதே மாதே !
மையன்மிக மீறுதே மதிதளலாகுதே
மன்மம்வையாதே கோதே ! (மோ)

தேடிவந்த சிதேவி கோடிசுகிர்த மேவி
கூடியணைவாய் தாவி (மோ)

பேதமை குணத்தால் அவசரப்படுகிறாய். நன்றாய் யோசித்துப் பார். இதனால் உனக்கு சுகிர்தமுண்டு.

விரதசாரணி :—சுகிர்தமா ? பேஷ். மதியபேர ! பேதமை குணமே பூஷணமாகக்கொண்ட தாம் என்னைப் பேதமை குணத்தால் பேசுகிறேனென்பது அத்யாச்சர்யமே ! பெண்களைக் கிள்ளுக்கீரையாக எண்ணிவிட்டீர்போலும். புருஷர்கள் பெண்களைப் பேதைகளென்று சொல்வது புலி பசுத்தோலைப் போர்த்து வஞ்சித்ததுபோலாகும். செய்யத்தகாத இச்செய்கையை செய்யத்துணிந்தது எந்த குணத்தாலோ ? பேதையினும்பேதை புருஷபேதை யென்று உம்மையல்லவோ சொல்லவேண்டும்.

இந்துஸ்தான்—ஆதி.

வீணாய் பேசுனெ யென்னுடன் வாது
வேண்டாம் வந்தவழியே போம் போம்
வேதையே ஆம் ஆம் (வீ)

வீண்மொழி பேசுதல் உமக்கழகல்லவே
விரைவியே பெரும்பழி விளைந்திடும் நில்லவே (வீ)

கற்புயர்மாது கலங்குதல் தீது
அற்பமாகாது அகலுந் தகாது (வீ)

கீசகராஜனே ! யான் சொல்வதை நன்குகவனியும். பூர்வ புண்ணிய வசத்திற் கேற்றபடி உடம்பு, செல்வம், நட்பு முதல்யாவும் சித்திக்குமென்று பெரியார் கூறுவதுபோல் சகலமும் நிறையுறப் பெற்று சிறுமதியால் என்னை வருந்தச்

செய்வது தவறு. பாதாரத்தை யிச்சிக்க முயல்வதால் இம்மையில் பழியும், மறுமையில் நரகமும் சம்பவிக்கும். வேண்டாம். நற்கதியை யடையத் தக்க சத்கர்மத்தை விரும்புவீர்.

**கீசகன் :—** *காதற் கனிரசமே!*

சிந்து—அடை.

*காதற்கிளி மொழியே! மாதர்த்திலகாஞ்சி!*
*காட்டு வதேன் கடின சிந்தையே!—என்மேல்*
*கருணை செய்யா தென்ன விந்தையே!—வீணே*
*காலம் போகுது காதன் மீறுது மேலுயர் குணசாலியே! என்னைக்*
*காட்டிக் கொடாதே மதன் கோட்டிற்கே, நீயே*
*மேட்டியாகுவாய் இந்த நாட்டிற்கே*

**விரதசாரணி :—**

*ஓதல் சரியல்லவே மாதர் பழிசுமக்கும்*
*வேண்டாம் சொன்னேன் அந்த எண்ணமே—வந்து*
*விளையும் கொடியபாவம் திண்ணமே—மகா*
*வீர சூரென சீர் விளங்கிய ராவணன் பேர் பாரழிந்தது முன்னம்*
*யாரா லென்பதும் நன்றாய் யோசியும் அந்தோ*
*தூறாய் உலக மெங்கும் தூஷியும்*

*சரச வசந்தக் குயிலே! உன் இகழ்ச்சியெல்லாம் நான் புகழ்ச்சியாகக்கொள்வேன். இந்த இராஜ்யத்திற்கு யானே அதிபதி. என் ஆக்கினைக்கு எல்லோரும் கட்டுப்பட்டவர்கள். நான் எதைச்செய்தாலும் ஏனென்று கேட்பாரில்லை. நிகரிலா வெற்றிவீரனென்று புகழ்வாய்ந்தவன். எனது சகோதரியைப்பற்றி விராடனுக்கு இவ்விராஜ்யத்தைக் கொடுத்து கௌரவப்படுத்தியிருக்கிறேன். பிடிவாதத்தைவிட்டு என் இஷ்டத்திற் குடன்படுவாய்.*

**[தொடுவதற்குக் கையை நீட்டுகிறான்.]**

விரதசாரணி :—ஆ! (பெரும் சப்தத்தோடு) போம் தூரே.

அடாணு—அடை.

பல்லவி.

கெடுவாய் இடருகு மாகும் போ
கடுவாய் நரகடைவாய் நலந்
தொடுவாய் துயர்படுவாய் நீ (கெடு)

அநுபல்லவி.

மடமை யுன்றன் மாற்றம் பொல்லா
மதியே சதியே பதியே
அதிபா தகமாங் கதியே (கெடு)

சரணம்.

மாது பழிவிடாது அணுகுந் தீது இது அடாது
மேதினி தன்னிலே பாதக மாகுமே
முறையோ ? இது சரியோ ? நீதி நெறியோ ?
திறமாகவே அறம் போகுமே (கெடு)

இது அடாது. குடிசேதத்திற்கு இடமுண்டாகிவிடும். பெண்ணென்று பயமுறுத்துகின்றுயோ? இந்தப் பூச்சிக் கெல்லாம் நான் பயப்படேன். முடவன் கடலைத்தாண்ட பந்தயம் போட்டதுபோலாகும். நானோ திடவீரசிங்கங் களாகிய ஐந்து கந்தர்வர்களுக்குரிய பத்தினி. எனக் கேதேனுந் தீங்குசெய்வாயேல் நீ ஈரேழுலகஞ்சென்றாலும் விடமாட்டார்கள். நீரில் விழுந்த உப்பைப்போல் உரு வில்லாமல் போய்விடுவாய். காமவெறிகொண்டு துக்க மாகிய நரகத்தில்விழ யெத்தனித்துவிட்டாய். கீசகா! யோசித்துப்பார். உனது சுய பத்தினியை யாரேனும் இவ்விதம் இச்சிக்கக்கண்டால் எவ்விதம் நீ துடிப்பாய்? ஏதேது செய்ய எத்தனிப்பாய்? தன்மானம் பிறமான மென்பது யோசித்துப் பார்? மின்போல் அழியுமின்பத் தைப் பெரிதாகக்கருதி அரிய தவத்தையும் பெரிய புகழையுங் கெடுத்துக்கொள்ள ஆசைப்படுகிறாய்? வேண் டாம். கக்கியசாதமெனக் கருதிச்செல்.

கீசகன் :—பொற்கொடி!

ஏதுகுலகாம்போதி—ஆதி

பல்லவி.

குணவதி கோபங் கொள்ளாதே—இனி
கூறுமென் சொல்லைத் தள்ளாதே (குண)

அநுபல்லவி.

கணம் பிரியேனுனை நானே
கரும்பினிய தேனே கனிவடைவேனுனே—என்றன்
கருத்துக் கிசைகுவாய் மானே! (குண)

சரணம்.

கோபமே கொடிய கோடாலி—அது
கொண்டவர் உயிர்க் கொரு மறலி
தாபந் தணியவே நீயோடி
தகைமைகுணஞ்சூடி தருவாய் முத்தம்நாடி—இது
தருண மல்லவே செய்யமோடி (குண)

என்ன நிர்தாக்ஷண்யமாய் நிராகரித்துப் பேசுகிறாய். முக்கனி சர்க்கரை கற்கண்டோடுகலந்த மூதாம்ருதமாகிய உன்னை எப்படி கக்கியசாதமெனக் கருதுவேன்?

விரதசாரணி:—இல்லையேல்பெண்ணால் இராவணன் எதுவானான்?

கீசகன் :—ஆனான். ஆனால்?

விரததசாரணி :—நீயு மதுவாவாய்.

கீசகன் :—(கோபாவேசத்தோடு) மதியற்றவளே! மானங் கெட்டவளே! கதியற்றவளே! ஹா. ஹா. அடிமைசெய்யவந்தவளுக்கு இவ்வளவு அகங்காரமா!

இங்கிலீஷ்நோட்—ஏகம்.

பல்லவி.

ஆரென மதித்தாய் நீயே! அகங்காரப் பேயே (ஆ)

அநுபல்லவி

அடக்குவாய் வாயே, அடிமைச்சீ நாயே—எனை (ஆ)

சரணம்.

பாருனையானோர் நொடியில் பார்நகைத்திட
பற்றி யிழுக்குறேன் உன் கொட்டமடக்குறேன்
பாதகி-காதகி-வாது ஓதுந் தீதகி (ஆ)

சீ குசடி! மயிலே மயிலேயென்றால் வானத்தில் ஏறிக்கொண்டனையோ? என் பெயரைக் கேட்டபோதே அண்ட பிண்ட மீரேழுங் கிடுகிடுவென நடுநடுங்குவதோடு அழுகிற பிள்ளையும் அம்மாவென்று வாய்மூடுமே? அறிவு கெட்டவளே! பார் உன்னை யென்ன செய்கிறேன்.

[பாய்ச்சலிட்டுப் பிடிக்கப்போகிறான்.]

விரதசாரணி:—ஐயோ! தெய்வமே! அநியாயம். திக்கில்லாப் பாவியானேனே.

[விரதசாரணி ஓட்டம் பிடிக்கிறாள். கீசகன் சிறிது தூரம் பின்பற்றிச்சென்று திகைத்தவனாய்த் திரும்பிவந்து.]

கீசகன்:—அகங்காரம்பிடித்த சிறுக்கி (தலையசைத்துக்கொண்டு) ஆகட்டும். ஆகட்டும். (சற்றுயோசித்து ஆவென்று இரண்டு கைகளையும் ஒன்றின்மேலொன்று தட்டிக்கொண்டு) ஆ! ஹா!! வீணே அவளைப் பின்தொடர்ந்து பிடிக்காமல் விட்டுவிட்டோம். ஏதுக்கோ நமது புத்தி இவ்வாறு பிசகிவிட்டது. இருக்கட்டும். "கிணற்று ஜலத்தை வெள்ளமா கொண்டு போகும்." ஒரு கைபார்த்து விடுகிறேன்.

## அங்கம் III. காக்ஷி 2.

இடம் :—மற்போர்க்களம்.

காலம் :—மாலை.

நடர் :—கங்கபட்டர், மந்திரி, சேனாதிபதி, காவலன் முதலியோர்.

[கங்கபட்டர், மந்திரி, போர்வீரர் முதலியோர் அரசன் வருகைக்கு எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்.]

கங்கபட்டர் :—சுமதியாரே! ஏன் அரசர் இன்னும் வரவில்லை? காரணம் உமக்கேதேனுந்தெரியுமா?

மந்திரி :—சுவாமின்! நான் இப்போது அவ்வழியேதான் வந்தேன். அரசர் அந்தப்புரத்தில் என்னமோ அலுவலாயிருப்பதாக வாயிற்காப்போன் சொன்னான்.

[அரசன் வருவதாகக்காவலன் தெரிவிக்கின்றான். அனைவரும் அரசனைக் கண்டு நமஸ்கரிக்கின்றனர்].

காவலன் :—சுவாமின்! மஹாராஜா வருகின்றார்.

கங்கபட்டர் :—(புன்னகையோடு) ஏது இவ்வளவு தாமதித்து வந்தது?

விராடன் :—சுவாமின்! நமது அந்தப்புரத்தில் ஓர் நடனமாது வந்திருப்பது தாங்கள் அறிந்தவிடயமன்றோ?

கங்கபட்டர் :—ஆம்.

விராடன் :—அந்தப் பெண்மணி மகாசமர்த்தியம் வாய்ந்தவள். நமது குழந்தை உத்தரைக்கு என்ன அற்புதமான பாடல்களைக் கற்பித்துள்ளாள். அவைகள் என்மனதிற்கு அளவிலாத வானந்தத்தை யுண்டாக்கிவிட்டது. அதுவன்றியும் அன்னவளுக்கு உற்றதுணைவியாம் ஓர் பெண் வண்ணப்பெண்ணாக வந்திருக்கின்றாள். அப்பெண்மணி தொடுக்கும் உன்னதமாலைகளை என்னென்று சொல்வது

அதைக் கண்ணுறும்போது என்னைமாய்க் கற்றுக் கொண்டனளோவென்று பிரமிக்க நேர்ந்தது. அதைப்பற்றி எனது பத்னி சுதக்கணையும் மகிழ்ச்சியுற்றுச் சொன்ன மாற்றத்தைக் கேட்டிருந்ததே காரணம்.

கங்கபட்டர் :—ஆம் இதுவெல்லாம் அவர்களுக்கு இயற்கை. எல்லாஞ் செய்வார்கள்.

விராடன்:—சுவாமின்! அதுவன்றியும் நமது புதிய சுயம்பாகியின் திறத்தைப் புகலவுங் கூடவில்லையே. தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு, கைப்பு என்ற அறுசுவைகளும் அவனிடமே பொருந்தி யிருக்கின்றது. அவனாற் செய்யப் படும் அப்பம், அல்வா, வடை, பாயசம் முதலியவைகள் ஒப்புயர்வு செப்பக்கூடாமை. என்ன அற்புதமாய்செய்து முடிக்கின்றான்.

கங்கபட்டர் :—மன்னா! சொல்லவும் வேண்டுமோ ? பூமியில் பிரக்யாதிபெற்ற பாண்டவர்களிட மிருந்தவர்களல்லவா ? ‘ பெருங்காயமிருந்த குடுக்கை வாசனை போகுமா ’ ?

[மந்திரி நிற்பதை கங்கபட்டர் பார்த்து அரசனிடத்தில் மெதுவாக]

தங்களுக்காக எல்லோரு மெதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்.

விராடன் :—அப்படியா ! வாரும்.

[மல்வீரர் யுத்தஞ் செய்கின்றார்கள். அதைக் கண்டு அரசன்]

பேஷ்! பேஷ்!! சுவாமின் ! உக்கிரவாசவனை ? ஜெயிக்கத் தக்க பலவான் ஒருவருமில்லை. மிக்கபரிசு அவனுக்கே கொடுக்கவேண்டும்.

கங்கபட்டர் :—பூபாலா! நமது மடைப்பள்ளியில் இருக்கும் சுயம்பாகிக்குங் கொஞ்சம் மற்போர் பழக்கமிருப்பதாகத் தெரிகிறது. அவனை அழைப்பித்துப்பார்ப்போமே.

**விராடன்** :—சுவாமின்! அவனால் ஆகாதென்று அன்றே நிரா கரித்துவிட்டானே.

**கங்கபட்டர்** :—ஆம். அப்போது பசியின் கொடுமையால் அவ்விதஞ் சொன்னான்போலும். இப்போது மடைப் பள்ளிக்கு அதிபதியாயிற்றே. ஒருகால் இசையினும் இசைவான்.

**விராடன்**:—சேர்வையே! நீ விரைவாய்ச்சென்று நமது மடைப் பள்ளியில் வந்திருக்கும் பலாயனனென்னும்சுயம்பாகியை இங்கழைத்துவா. (அருகிலிருக்கும் ஜெயவீரனைப் பார்த்து) ஜெயவீரா! ஆகட்டும். நீ ஒருகைபார்.

**ஜெயவீரன்**:—பிரபு! உக்கிரவாசவன் ஒருகைக்கு யானிணையோ? ஆலையிலிட்ட கரும்பைப்போலல்லவோ ஆகும். க்ஷமித்தருளல் வேண்டும்.

**விராடன்** :—(கல்லென்று நகைத்துவிட்டு பலாயனன் வந்துநிற்பதைப் பார்த்து) பலாயனா! இதோ நிற்கும் வீரனைப்பார். ஒருவராலும் ஜெயிக்கக்கூடாத நிகரிலா வீரனாக விளங்குகின்றான். உன்னால் இந்த வீரனை எதிர்க்க முடியுமென்று நமது கங்கபட்டர் அபிப்பிராயப்படுகிறார்.

**பலாயனன்** :—அதற்கென்ன? உத்திரவானால் செய்யச்சித்தமாயிருக்கிறேன்.

[இருவரும் மற்போர் செய்கின்றார்கள். உக்கிரவாசவன் தலைசாய்ந்து விடுகிறான்.]

**விராடன்** :—பலே! பலாயனா! சபாஷ்! மெச்சினேன். நீயே வெற்றிவீரன். நீயே நிகரில்லா ஜெயதீரன். (மந்திரியை நோக்கி) சுமதி, சகல வெகுமானங்களு மிந்த பலாயனனே பெறத்தக்கவன். இவனுக்கே அளிப்பாய்.

**மந்திரி** :—அப்படியே.

[பலாயனனுக்கு வெகுமானங்கள் தந்து மாலையால் அலங்கரித்து, கரகோஷத்துடன் விராடன் அனைவரையும் பார்த்து]

நாடன் :—சுவாமின்! வாருங்கள். அனைவருங் கொலுமண்டபத்திற்குச் செல்வோம்.

[அனைவருங் கொலு மண்டபத்தை நாடிச் செல்கின்றனர்.]

---

## அங்கம் III. காக்ஷி 3.

இடம் :—கீசகன் சயன அறை.

காலம்.—பிற்பகல்.

நடர் :—கீசகன்.

[கீசகன் காமப்பித்தேறினவனாய் தன் முன் றோன்றும் ஒவ்வொன்றையும் விரதசாரணியாகப்பாவித்துப்பிதற்றிக்கொண்டிருக்கின்றான்.]

கீசகன் :—ஆ! ஹா!! நம் முயற்சியெல்லாம் வியர்த்தமாய் முடிந்ததே. (சற்றுபொறுத்து) ஆயினும் பெரிதெல்ல குப்பையிலிருந்தாலுந் தங்கமே. அவளைக் கூடப்பெற்றாலது வே போதும். அழகார் பசுங்கிளியே! உன்னழகை யெதற்கு ஒப்பிட்டுச் சொல்வது :

வில்லொக்கும் நுதலென்றாலும்
வேலொக்கும் விழியென்றாலும்
பல்லொக்கு முத்தென்றாலும்
பவளத்தை யிதழென்றாலுஞ்
சொல்லொக்கும் பொருளொவ்வாவாற்
சொல்லலா முவமையுண்டோ
நெல்லொக்கும் புல்லென்றாலும்
நேருரைத் தகாவன்றே.

திருவே உருவாகவந்த தேன்மொழியே! உன் உருவத்தைக்கண்ட அன்றுமுதல் என்னிரு விழியிலும் உன் சொரூபமே பரவலுற்று பிரம்மை பெருகச் செய்கின்றதே. அருங்கிளியே! யான் யெப்போது உன்னை யணையப்பெறு

வேனோ? (நிலவைப் பார்த்து) ஆ! நிலவே! நீயுங் கொடுமை யைச்செய்ய நினைத்து விட்டனையோ? அந்தோ! அக்கினி யைப்போல் கிரணங்களை வீசுகின்றனையே? உன்னைச் சீதளச் சந்திரனென்று சொல்கின்றார்களே? பேடியைப் புருஷனென்று அழைப்பதுபோலோ? ஒருமுதற் பெரு மான் சிரமதிற்சேர்ந்தும் பெருமதி படைத்தாயில்லையே. மதியமே நிராயுத பாணியாகிய என்னிடஞ் சமர்செய்ய வருவது தருமமோ? இதனாலோ ஆதியிற் சிவபெருமான் அங்கமாகிய கண்டத்தில் விஷத்தை வைத்துக் கொண்டு அங்கமல்லாத அபாங்கமாகிய சடையின்மேல் உன்னை யமரச்செய்தது. உடன்பிறந்தானுக்கே உயிர்ப்பகை யென்றால் என்போல்பவரை என்ன செய்யத்துணியமாட் டாய்? இக்கொடுமையாலன்றோ ஞாயிறுபோல் வாழாமல் தேய்ந்து போகிறாய்? வீணாய்க் கிரணங்களை வீசாதே? மயக்கம் மேலிடுகின்றது. (சற்று நிதானித்து) மதனா! நீ சுத்த வீரன்தான். பொறு! பொறு!! தனக்கு நிகரில்லை யென்று யெதிர்த்தோடிய அந்தப் பெண்ணையல்லவோ உன் மலர்க்கணையால் வாட்டவேண்டும்? (யோசித்து) ஓ! ஹோ!! உன்னிலும் அழகிற் சிறந்தவளென்று புறங் காட்டி என்னிடம் வந்தனையோ? இது தகாது. யான் சயனிக்கவேண்டும்.

[பஞ்சணைமேல் படுத்துக்கொண்டு கன வில் விரதசாரணியைக்கண்டு கீழே விழுகிறான். புத்திசிகாமணி பிரவேச மாகிறான்.]

**கீசகன்:**—(நித்திரையில்) ஆ! சுந்தரமே! வந்தனையா? வா. நடந்தாவந்தாய்? அந்தோ! உன்மெல்லிய பாதம் நோகு மே? (வலதுகையால் தழுவ தவறிகீழேவிழுந்து திடுக்கிட்டெழுந்து கண்ணைப் பிசைந்து விழித்துப் பார்த்து) புத்திசிகாமணி! எப்போதுவந்தனை? என்ன சமாசாரம்?

**புத்திசிகாமணி:**—நன்பா! நான்வந்தது இருகட்டு. நீங்கோ இப்போ புரண்டு புரண்டு எழுந்திங்களே ஏ, அது?

**கீசகன்:**—எப்போது? இப்போதா?

புத்திசிகாமணி :—ஓ! ஹோ! கண்ணாடி போட்டுகினேண்ணு பாத்திங்களோ? நாகுருடெ அல்ல. (கண்ணாடியைக் கழற்றிக் கொண்டு) பாத்திங்களா! இது தங்க மலா பூசி இருக்குது. சும்மா தமாஷூக்கு போட்டுகினு இருக்குறே. தெரியு. தெரியு. மறைக்காதிங்கோ?

கீசகன் :—புத்திசிகாமணி! அதெல்லாம் ஒன்றுமில்லை.

புத்திசிகாமணி :—அதெல்லாம் ஒண்ணுமில்லெனு? என்னமோ இருக்கிறதா தெரியுதே? (சற்று பொறுத்து) அரசே! காட்டிலே விளைஞ்சாலும் ஊட்டிலேதானே வரவேணும். இது தெரியாதா?

கீசகன் :—நண்ப! வெந்த புண்ணில் கோலிட்டு வேடிக்கை செய்கிறாய்? வேண்டாம்.

புத்திசிகாமணி :—(அவசரமாய்) எங்கே? எங்கே? காட்டுங்கோ? மருந்து போட்டிங்களா?

கீசகன் :—எப்போதுமிந்தக் குறும்புத்தனம் போகிறதில்லையே?

புத்திசிகாமணி :—குறும்பாயிது? புண்ணு போச்சினு வந்த பாவிசும்மா யிருப்பா? கேட்டே. வாணு யின்னு இதோ மூடிகினே.

கீசகன் :—புத்திசிகாமணி! என் நிலைமையை அறியாமலே, அவசரமாகப்பேசுகிறாய்?

புத்திசிகாமணி :—என்ன நிலமை. யாரு இன்னல் செய்தாங்களா?

கீசகன் :—ஹா இன்னலா! அன்னோர் கன்னல் மதனையேவி கலங்கச்செய்தார்.

புத்திசிகாமணி :—அடடா! அப்படியா சங்கதி? ஆணு? பெண்ணு?

கீசகன் :—நண்பா? பெண்தான்.

புத்திசிகாமணி :—ஓ! ஹோ !! பெண்ணு சங்கதியோ. சொர்தா! சொர்தா. அதாபுண்ணிண்ணு சொன்னிங்களோ! சொர்தா. சொர்தா.

கீசகன் :—அந்தோ! நண்பா! முற்றிலுங் கேட்காமலே குற்றப் படுத்திப் பேசுகிறாய். புண்ணல்ல என் கண்ணே அது ?

புத்திசிகாமணி :—கண்ணு! எங்கெ போச்சு அந்த கண்ணு. ஏ நண்பா! ரொம்ப அழகுடையவளோ ?

கீசகன் :—நண்பா! என்ன வென்று சொல்வேன்.

பைரவி—சாப்பு.

பல்லவி.

ஆயிரம் நாவுடைய ஆதிசேடனும்
அறையப் போகுமோ நண்பா ! (ஆ)

அநுபல்லவி.

மாயிருண் ஞாலத்து மாமதியம் போலே
மாது யென் மனமதை மால் செய்துப் போனளே (ஆ)

சரணம்.

மின்னற் கொடியிடையாள், அன்னமிளிர் நடையாள்
கன்னன் மதற் குடையாள், காமரசப்படையாள்
அன்னளிணையுடையாள், ஆருமுரைகிடையாள்
பொன்னர் தொடியுடையாள், பூணர்பொலி சடையாள் (ஆ)

எல்லா ஆபரணங்களும் அலங்கரிக்கப்பட்டு மன்மதன் வில்லையும், அவனால் தொடுக்கப்பட்ட மலர்பாணங்களையும் ஒளி பொருந்தியச் சந்திரனையும், விண்ணிற் றோன்றும் மின்னற்கொடியையும், கடலிற்றோன்றும் அமுதத்தையும் நிகரில்லை யென்று சொல்லும்படியாக விளங்கி வேரில்லாத பூங்கொடிபோலும், யானை விழுங்கிய விளாங் கனிபோலுஞ்செய்துவிட்டு விரைந்து போய்விட்டனளே?

புத்திசிகாமணி : ஆ! ஹா!! அப்படியோ ! இப்போ விவரம் தெரிஞ்சு போச்சு. ஆனு மறுபடியும் அந்த பெண்ணெ நீங்கொ பாக்கிலேயோ ?

கீசகன் :—பார்த்தேன்.

புத்திசிகாமணி :—சொர்தா. பிறகு.

கீசகன் :—தழுவிச்சேர்த்தேன்.

புத்திசிகாமணி :—ஹா. ஹா.

கீசகன் :—முத்தமிட்டு ஆர்த்தேன்.

புத்திசிகாமணி :—பேஷ்! பேஷ்!

கீசகன் :—பிரியேன் பிரியேனென்று வாயாரச் சொல்லக் கேட்டு பூர்த்தேன்.

புத்திசிகாமணி :—சரியா போச்சு. அப்புறம்.

கீசகன் :—விழித்தேன். உன்னைக்கண்டேன்.

புத்திசிகாமணி :—ஆறு நா வரும்போது ஒரு பொம்மனாட்டியுங் காணுமே? நீங்கதானே புரண்டிண்டிருந்திங்கோ.

கீசகன் :—(நாணத்துடன் தலையை மெதுவாகத் தடவுகிறான்.)

புத்திசிகாமணி :—ஓ! ஹோ! கனவோ?

கீசகன் :—(மௌனமாய் தலையை அசைக்கிறான்.)

புத்திசிகாமணி :—சரி! சரி!! ரொம்ப சரி!!! கனவிலே கண்டா தப்பவே தப்பாது. கட்டாயங் கைகூடும்.

கீசகன் :—ஏன் நண்பா! கைகூடுமா?

புத்திசிகாமணி :—பைத்தியமா! தெரியாதவங்கோ விதவிதமா பேசுவாங்கோ. அனுபோகந்தானே. கனவிலேகண்டது நிஜம். நிஜம்.

கீசகன் :—புத்திசிகாமணி! கனவோ நினைவோ வென்று சாஸ்திரவாதிகள் சொல்லுகின்றார்களே? நிஜமாகக் கைகூடுமா?

புத்திசிகாமணி :—ஹா. சாஸ்திரமு கீஸ்திரமு. இதுக்கெல்லா சாஸ்திரம் பாத்தா ஆகுமா? சமயோசிதமா வேலைசெய்யணு! மன்னு! எதுதிரமன்றமோ அதுதா சாஸ்திரம், புஸ்தகசாஸ்திரம் பாத்தா சிமந்தனி கதையாகும்.

**கீசகன்** :—நண்பா! என்ன சீமந்தனி கதை விபரமாகச் சொல்.

**புத்திசிகாமணி** :—(கேலியுடன்) அது தா சீமந்தனி கதை சாஸ்திரம்.

**கீசகன்** :—என்ன நண்பா! விளையாடுகிறாய். விபரமாகச்சொல்.

**புத்திசிகாமணி** :—தெரியாதா? ஒரு சாஸ்திரி பதினாயிரவருஷமின்னு பலிக்கிறு. இன்னொரு சாஸ்திரி நாலுவருஷத்திலே நாணிபோகுண்ணு குலிக்கிறு. இரண்டுந் தலைகீழாபொரண்டுபோயி மனோதிட சூஸ்த்ரத்தாலே மகிட்சியானுள்.

**கீசகன்** :—மனோதிடமென்றால் விபரந் தெரியவில்லையே?

**புத்திசிகாமணி** :—அதுதா! அதுதா! மனதிட விரதம்.

**கீசகன்** :—ஆனால் நானும் ஒரு விரதத்தை அனுஷ்டிக்கிறேனே?

**புத்திசிகாமணி** :—ஐயோ! பயித்தமே! விரதமுமண்ணுங்கட்டியு. அல்லா முயற்சிதானே காரணுமென்னு? முயற்சியுடையார் இகழ்ச்சியடையார். இது தெரியாதா.

**கீசகன்** :—நண்பா! இதெற்கென்ன முயற்சி செய்தால் சித்தி பெறும்.

**புத்திசிகாமணி** :—இது கூடவா சொல்லவேணு. நல்ல முடுக்கா எல்லா போட்டுகினு நடை சொகுசாலே ஒரு நாளு போகணு. குதிரைமேலே ஒரு நாளு போகணு. ஆனைமேலே ஒரு நாளுபோகணு. இப்படி நாலுதடவை போனுக்கா உன்னை பாக்கபாக்க ஒறப்பு யேறுது. ஒறப்பா காய காய பழுக்குது. பழுத்துவிட்டா பால்லே போட்டு பெசிஞ்சி சாப்புடுமே. கசக்குமோ?

(இருவரும் நகைக்கின்றார்கள்.)

**கீசகன்** :—நண்பா! இனி அரை நிமிஷமும் தாமதிக்கக்கூடாது. யேதேனும் ஒரு முயற்சியைச்செய்து எனது மனக் கஷ்டத்தைத் தீர்க்கவேண்டும். இந்நன்றியை யானென்றும் மறவேன். இது திண்ணம்.

**புத்திசிகாமணி** :—வாருங்கள். அப்படியே செய்வோம்.

(போகிறார்கள்.)

## அங்கம் IV. காக்ஷி 1.

இடம் :—வசந்தமண்டபம்.

காலம் :—மாலை.

நடர் :—சுதக்கணை, உத்தரை, பிருகந்நளை, தோழியர் முதலியோர்.

சுதக்கணை :—உத்தரா! எத்தனை பாடல் கற்றுக்கொண்டனை?

உத்தரை :—நான்கு பாடல் பயத்துடன் கற்றுக் கொண்டேனம்மா!

சுதக்கணை :—அப்படியா? (பிருகந்நளையைப்பார்த்து) பிருகந்நளா! நான்கு பாடல்தான் தெரியுமாமே?

பிருகந்நளை :—பூவரசி! ஆம். பாலபருவமாயிற்றே அதிகசிரமங் கொடுத்தல் கூடாதென்று அம்மட்டில் நிறுத்தினேன்.

சுதக்கணை :—ஓ! ஹோ!! சரிதான். எதோ ஓர்பாடல் பாடச் செய் பார்ப்போம்.

பிருகந்நளை :—இளவரசி! "இன்னுங் கருணை யில்லையா" என்ற பாடலைப்பாடு.

உத்தரை :—அப்படியே! (பாடுகிறாள்.)

சுதக்கணை :—பேஷ். கண்மணி! என் பயப்படுகிறாய்? தைரியமாகப் பாடு.

பிருகந்நளை :—எதோ! எதோ! ஆதிதாளத்தில் அக்ஷரகாலத்துடன் "சிவசுப்பிரமண்யா நமஸ்து" என்ற பாடலைப் பாடு. (பாடுகிறாள்.)

சுதக்கணை :—பிருகந்நளா! மெச்சத்தக்கதே. நீ மெத்த சிரமமெடுத்துக் கொண்டாய். நங்காய்! உனது நடிகத்தைப் பார்க்க எனக்கு மிகவும் ஆவலாகயிருக்கிறது.

**பிருகந்நளை** :—தாயே! தமது இஷ்டத்துக்குந்தடையுண்டோ நடிக்கச் சித்தமாயிருக்கிறேன்.

[பிருகந்நளை நடிக்கின்றாள்.]

**சுதக்கணை** :—வெகு நேர்த்தி. வெகு நேர்த்தி. பெண்மணி என்று லெண்ணிச்சொல்லமுடியாத நடனப்பெண்களின் நடிப்பைக் கண்ணுற்றிருக்கிறேன். ஆனால் உன்னைப்போல ஆடலுக்கேற்ற பாடலும், பாடலுக்கேற்ற ஆடலுமாக பதிந்து நடித்தவரை யான் பார்க்கவே யில்லை.

[கீசகன் வெகுவிரைவாய் வந்து சுட்டு விரலைக்காட்டி அக்காவென்றழைக்கிறான்.]

**கீசகன்** :—அக்கா! ஒரு சமாசாரம்.

**சுதக்கணை** :—வா! வா!! கீசகா! உட்காரு.

**கீசகன்** :—அக்கா! ஒருவிஷயம். இங்கு எழுந்துவாருங்கள்.

[கீசகன் சுதக்கணையுடன் மறைவாக நின்று சிறியதொனியாக வார்த்தையாலும் செய்கையாலும், அபிப்பிராயத்தைத் தெரிவிக்கிறான்.]

**சுதக்கணை** :—கீசகா! என்ன?

**கீசகன்** :—அக்கா! உன்னால் ஓர் பெரியவிஷயமாக வேண்டியிருக்கிறது. அதுபற்றியே யான் இங்குவந்தது. உன்னிஷ்டப்படி கட்டாயம் முடிக்கிறேனென்று எனக்குக் கைப்போட்டுக் கொடுத்தால் சொல்கிறேன்.

**சுதக்கணை** :—கீசகா! அவ்வளவு முக்கியமான விஷயமென்ன? மறைக்காமல் சொல்.

**கீசகன்** :—அதெல்லாம் முடியாது. முன்னங் கைபோட்டுத் தாரும்.

**சுதக்கணை** :—அப்படியே. (கைபோட்டுக் கொடுக்கிறாள்).



கீசகன் :—(மெதுவாக) அவர்களை அந்தப்புரத்திற்கு அனுப்பி விடும்.

சுதக்கணை :— (உத்தரை முதலியோரிடமேகி) கண்மணி உத்தரா! பிருகந்நளா! போஜன காலமாயிற்று. நீங்கள் அந்தப் புரஞ்செல்லுங்கள்; யான் சற்றுதாமதித்துவருகிறேன்.

உத்தரை :—அம்மணி! அப்படியே.

[எல்லோரும் அந்தப்புரத்திற்கு போய்விடுகின்றனர். கீசகன் சுதக்கணையோடு வருத்தங் கொண்டவனாய்]

கீசகன் :—அக்கா! என்னுடைய பராக்கிரமமென்ன? வீரமென்ன? உன்னுடனிருக்குங் கேவலம் ஒருபணிப்பெண் என்னைக் கின்னரக்கினையாய்ப் போவென்று விட்டனளே? என்னென்று சொல்வேன்.

சுதக்கணை :—(ஆச்சரியமாய்) யார்? மஞ்சுமணியா? வனஜாக்ஷியா? எந்தப்பெண்?

கீசகன் :—அக்கா! அவர்களல்ல! யாரோ ஒருத்தி புதிதாய்த் தம்மிடம் வந்திருக்கிறளே! அவள்.

சுதக்கணை :—ஓ! விரதசாரணியோ? என்னசெய்தாள்?

கீசகன் :—அக்கா! சொல்வதென்றால் அல்லல் அதிகரிக்கும். போகட்டும். அறியாமையால் அவ்விதஞ்செய்தாள். ஆனால் அப்பெண்ணிடம் பெரிய பிடிவாதமொன் றிருக்கிறது. அதை எப்படியாகிலும் மாற்றி எனது கருத்துக்கிசையச் செய்யவேண்டும்.

சுதக்கணை :—கீசகா! உன் கருத்தாவதென்ன?

கீசகன் :—எனக்கு மனைவியாக யிருக்கவேண்டு மென்பதே?

சுதக்கணை :—அந்தோ! கீசகா! அந்தநினைவு சிந்தையிற் கொள்ளாதே. அன்னவள் மகாபதிவிரதை. ஐந்து கந்தர்வர்கள் உரிமை பாராட்டும் சுந்தரி. கனவில் நினைத்தாலும்

கொடியபாபம் சம்பவிக்கும். இதற்குத்தானா என்னைக் கைபோட்டுத் தரும்படிச் சொன்னாய்? ஐயோ விளக்கை வைத்துக் கொண்டு கிணற்றில் விழுவதைப் போலாகும் வேண்டாம். வேண்டாம்.

**கீசகன் :**—அக்கா! ஐந்து கந்தர்வர்களுக் குகந்தவளாயின், ஆறுவதாக வென்னையுஞ் சேர்த்துக் கொள்ளட்டுமே? அதனாலேதேனு மந்தங்குறையுமோ? எனது வார்த்தைக் கிசைந்து நீர் செய்யாவிடில் (**தன்னிடமிருக்கும் வாளையுருவிக் கொண்டு**) இப்போதே என்னுயிரை இவ்வாளுக் கிரையாகச் செய்துவிடுவேன்.

**சுதக்கணை :**—(**திடுக்கிட்டு வாளைப் பிடித்துக்கொண்டு**) ஆ! கீசகா! உனக்கென்ன பைத்தியமா? (**தனிமையில்**) என்ன தர்ம சங்கடம். அந்தோ! கற்புடைய மாதர் கண்ணீர்விட்டால் கற்பகோடிகாலம் அந்தப்பாவம் அக்குடிமுழுதும் பற்றித் தொடருமே.

**கீசகன் :**—உமக்கொன்றும் கஷ்டமில்லையே. நீரிட்ட வேலையைச்செய்யவந்தவள். நீர் சொன்னதைச் செய்யவேண்டியதுதானே. (**சாவதானத்தோடு**) அக்கா! நான்சொல்வதை கவனித்துக்கேளும். நீர் அந்தப்புரஞ்சென்று தந்திரமாய் அப்பெண்மணியை கீசகன் அரண்மனைக்குப்போய் பக்ஷணம் வாங்கிக்கொண்டு வாவென்று உத்திரவுசெய்து விடும். உமது வார்த்தையைத் தடுக்கமாட்டாள். பிறகு யான் வசப்படுத்திக்கொள்கிறேன்.

**சுதக்கணை :**—கீசகா! நன்றாக யோசித்துச் செய்.

**கீசகன் :**—அதெல்லா மெனக்குத் தெரியாதா? நான் சொன்னதுபோல் நீர் பக்குவமாய்ப் புகட்டவேண்டியதுதான் முக்கியம். (**இரக்கத்துடன்**) அக்கா! போய்வரட்டுமா?

[**சிறிது தூரஞ்சென்று திரும்பிவந்து**]

**அக்கா! அக்கா! உண்மையை வெளியிடப் போகிறீர்? பத்திரம்.** (**போகிறான்.**)

---

## அங்கம் IV. காக்ஷி 2.

இடம் :—அந்தப்புரம்.

காலம் :—நடுப்பகல்.

நடர் :—சுதக்கணை, விரதசாரணி.

[சுதக்கணை விரதசாரணியுடன் வார்த்தை யாடிக்கொண்டே வருகிறாள்].

விரதசாரணி :—அம்மா! அடியாளை மன்னிக்க வேண்டும். முன்னொரு நாள் பலாத்காரமாக காமவெறியால் என்னைக் கைபிடிக்கவந்தார். அம்முறை தப்பியதே யெம்பெருமான் கிருபையாகும். இன்னும் யாரையாகிலும் அனுப்புங்கள். (நமஸ்கரிக்கின்றாள்.)

சுதக்கணை :—விரதசாரணி! நீ சுந்தப் பைத்தியக்காரி! பகற்காலத்தில் அவ்விதஞ்செய்வானோ? அநினு மெனக்குப்பக்ஷணம் வேண்டுமென்றால் ஒருநிமிஷமும் உன்னைத் தாமதிக்கச்செய்யான். என்சொல்லைத் தட்டாதே.

விரதசாரணி :—அம்மணி! அவ்விடத்திற்கேக எள்ளளவும் என் மனமிசையவில்லையே?

சுதக்கணை :—(ஆர்ப்பாட்டத்துடன்) ஆ! ஹா!! கூப்பிடு அந்த பிருகந்நளையை? அம்மா! தலைவி வார்த்தையைத்தட்டாமற் செய்வாளென்று நீண்டதோர் உபந்நியாசஞ்செய்தாளே.

விரதசாரணி :—அம்மம்மா! கோபிக்க வேண்டாம். அடிமை விதிபோலாகிறது. ஆக்கினைப்படியே செல்கிறேன்.

சுதக்கணை :—(கோபக்குறியுடன்) சீக்கிரஞ்சென்று வா.

விரதசாரணி :— நீலாம்புரி—திரிபுடை.

பல்லவி.

பேதையானும் போரேனம்மா!
பிழை பொறுக்க வேணுமம்மா! (பே

அநுபல்லவி.

தீதேது விளையுமோ தான் தெரியேனே ? (பே)

சரணம்.

ஏழை யென்றன் சொல்லதுவும்
என்னளவும் செல்லாதுவும்
ஊழின் வலியிதுவோ ? ஓ! தெய்வமே ! (பெ)

திங்களுங் கங்கையுஞ் சூடிய சிவமே! அங்கையிற் சங்கு சக்கரமேந்திய ஆதிமூலமே! தேவாதி தேவர்களே! சூரியசந்திர மூர்த்திகளே! கொழுக்கொம்பில்லாத கொடி போல் தத்தளித்து தனியே செல்கின்ற இத்தையலை உங்கள் திருக்கண்ணால் நோக்குவீர்களாக. உத்தம ஸ்திரீகளுக்கு முக்கியாபரணங் கற்பேயாகும். ஆகவே யான் பிரார்த்திக்கும் விண்ணப்ப மென்னவெனில் கொல்லும் வேங்கையினுங் கொடியபாவி அல்லல்விளைப்பானென்பது திண்ணம். தெய்வங்களே! எனக்குற்றதுணையாகவிருந்து எனது கற்பிற்கொரு குற்றமுமணுகாவண்ணங் காத்தருளப் பிரார்த்திக்கின்றேன். (இருகரங்களையுஞ் சிரமேற்கொண்டு மௌனமாயிருக்கிறாள்.)

அசரீரி :—அஞ்சன்மின். அஞ்சன்மின். சூரியபகவான்ஆக்ஞைப்படி உனது கோரிக்கையை நிறைவேற்றுவோம்.

விரதசாரணி :—(திடுக்கிட்டு) சோதிச்சுடரே! அல்லலொழிந்தேன். உள்ளமகிழ்ந்தேன். (மெதுவாகச் செல்கிறாள்).

## அங்கம் IV. காக்ஷி 3.

இடம் :—கீசகன் வசந்தமண்டபம்.

காலம் :—நடுப்பகல்.

நடர் :—கீசகன்.

[கீசகன் அரண்மனை மேல்மாடியிலிருந்து விரதசாரணியைக்கண்டு விரைந்தோடி வந்து கையைக்காட்டி யழைக்கிறான்.]

கீசகன் :—வராய்! வராய்! சுந்தரி!

இங்கிலீஷ்நோட்—அடை.

பல்லவி.

வா வா வனிதா! குணிதா! கனிதா! இனிதா! (வா)

அநுபல்லவி.

வாடினேனுனை நாடினேன் தேடினேன் (வா)

சரணம்.

தேவாமுதமே! தெவிட்டாக்கனியே! நின்
நாவூறல் நன்று பருகிடுவேன்
நங்கையே! ரதிதங்கையே!
நானுனைக் கண்டிட மேனாட்டவமன்றோ?
நாணம் விட்டிடுவாய் நாயகமே! (வா)

என்னுருயிர்க் கோரமுதமே! உன் பேரழகைக் கண்டு லக்ஷ்மி தாமரையிற் போய் ஒளித்துக் கொண்டாள். உன் வதனத்தைக்கண்ட சந்திரன் மேகத்திற்போய் மறைந்துக்கொண்டான். உன் நடையைக்கண்டு மின்னலும் ஒளி மழுங்கிற்று. அன்னப்பெடையே! அழகார் பசுங் கொடியே! கன்னன் மதனு மிதுதான் சமயமென்று கணைகளைத் தொடுத்து இன்னல் செய்கின்றனே. இனி என்னால் சகிக்கமுடியாது. நீ யாதொன்றுக்கும் அஞ்ச வேண்டாம். யாரேனு முன்னை யேதாகிலுஞ் சொல் வாரேயானால் அவர் மன்னரேனுஞ் சின்னாபின்னமாகச் சிதைத்துவிடுவேன். நானே அழகினும், வயதினும், உனக் கேற்றவனாக விளங்குகிறேன். மனமிரங்கி மருவ வரு வாய் மாங்குயிலே!

**விரதசாரணி** :—ஐயா! நான் நாடிவந்த விஷயத்தை விசாரியா மலே ஆடிப்பாடி அளந்து கொட்டுகின்றீர். சகல கலை களையுமுணர்ந்த தாம் அதன்வழியே நிற்காது மதியைச் சிதறவிடுதல் அடாது. அற்ப கரிவண்டானது செண்பக மலரை சேரவிரும்பினது போலாகும். ஆகவே என்னைத் தொடத்தகாது. "அடாது செய்தால் படாது படுவார்" என்பதையறியீரோ? கற்பென்னும் தீயில் புழுவைப் போல் துடிக்கநேரும். அன்றியும் என்னையாளுடைய உத்தமர் கண்டால் உன்சித்தங்கலங்கக்குத்தி சிதைத்திடு வார்கள். துர்ப்புத்தியைவிட்டுவிடு.

**கீசகன்** :—சுந்தரியே! ஓர் சிற்றெறும்பானது பெரிய சமுத் திரத்தைக் குடித்துவிடுவேன் என்று பயமுறுத்தியது போலாகும். பேரழகி! மழையால் காற்று நனைந்திடுமா? நெருப்பினால் ஆகாயம் வேகுமா? என்னை யசக்குபவர் யாரிருக்கிறார்கள்? அடிக்கடி ஐந்து கந்தர்வர்களென்று பூச்சிகாட்டுகின்றனையே. அவர்களால் என்னவாகும். ஆயிரங் கந்தர்வர்களானாலும் அரை நொடியில் அரக்கிப் பிழியத்தக்க வல்லமையை வாய்ந்த எனக்கு நீ தெரிவிக் கும் ஐந்து கந்தர்வர்கள் எம்மாத்திரம்? செந்திருவைப்பழி க்கும் சௌந்தரியே! உன் சித்தமிரங்கிச் சேரவருவாய்.

**விரதசாரணி** :— ஸ்ரீராகம்—ஆதி.

பாவமாகும் ஆகும், சொன்னேன் கீசகா! (பாவ)
மாயன வேடுவன் நாடுறும் கேடல்லோ
பூவையரார் துயர் பூவினிலே பொல்லாப் (பாவ)

**கீசகன்**:—

மேவருமாரிழையே! சொல்வேன் பொல்லாத்துன்பம்
மேவினுங் கனவிலுமே மறவேன் வல்லமெனது
ஆவிநீ கேட்பினு மளித்திடுவேன் எண்ணுந்
தாவியணைந்திட தகுபவனே நான் திண்ணம்
ஆவலானேன் ஆனேன் உன்னை யணைய (ஆ)

[கீசகன் பலாத்காரஞ் செய்கிறான். விரத சாரணி சீற்றத்தோடு பாத்திரத்தை எறி ந்துவிட்டு விரைந்து ஓட்டம்பிடிக்கிறாள். கீசகன் பின்பற்றி ஓடுகிறான்.]

படாதபழிதொடும் விடாது, விடாது (தொடா)

**கீசகன் :—** அடாத மொழிகளாலரிவையே யேசினும்
அனுவமகலமனம் நாடுமோ—உனை
விடேன் விடேனெனை வெறுத்துப்பேசினும்
வெற்றிவீரனென் பதோடுமோ

**விரத :—** வல்லியோர் தமை வாதிலினைவதோர்
வீரமென்றெண்ணிருயோடா— அடே
கள்ளப்பயலே முழக்கேதங்காய் வெறிநாய்
கண்டசுகமேதேதடா

**கீசகன் :—** மோகமிறி மலர் முத்தமே நாடுந்து
மொய்குழலே மனமிளகுவாய்—எழில்
தோகையே இனிநான் நிமிடமுந் தாளேன்
துரிதமாய் மகிழுடனணைகுவாய்

[கீசகன் விரதசாரணியின் கையை பலாத்கார
மாகப் பிடித்து இழுக்கிறான்]

**விரதசாரணி :—** அடே சண்டாளா! விடுயென்கையை (கையைப் பிடுங்கிக்கொண்டு கிண்ணத்தையுமெறிந்துவிட்டு) துரோகி உன்கையையும், வாயையும் கிழித்து மெய்வருந்த வதை செய்யும்படிச் செய்கின்றேன் ஆகட்டும், ஆகட்டும்,

(விரதசாரணி ஓட்டம் பிடிக்கிறாள்)

**கீசகன் :—** அடி அகங்காரி! ஓடிநாலும் விடமாட்டேன் நில் நில்

(கீசகன் பின்பற்றி ஓடுகிறான்.)

அடாணா—ஆதி.

பல்லவி.

விட்டேனா உன்னை விட்டேனா
பட்டி சிறுக்கி உன்றன் கொட்ட மடக்குறேன் பார் (விட்)

அநுபல்லவி.

எட்டுதிக்கும் நடுங்குமே எனது பெயரைச் சொன்னாலும்
குட்டிக்கரணம் போட்டாலும துட்டப்பதடியே சும்மா (விட்)

சரணம்.

கட்டுக்கதைகள் சொல்லி-மட்டித்தனமாய் மல்லு
கொட்டியளந்ததோஷி-கொடுமைபேசி, மடமை சீ சீ
திட்டவீரனை யெதிர்க்கக்கிட்டுவாரோ, வீண்பேச்சு
அட்டகாச மெல்லாமிங்கு வெட்டவெளியாகப்போச்சு (விட்)

அங்கம் V. காக்ஷி 1.

இடம்:—விராடன் கொலு மண்டபம்.

காலம்:—நண்பகல்.

நடர்:—விராடன், மந்திரி, கங்கபட்டர், பலாயனன், பிரபுக்கள் முதலியோர்.

[விரிந்த கூந்தலுங் சொரிந்தகண்ணீருமாக]

விரதசாரணி:—ஆ! விராட பூபதி! அபயம்.

[கீழேவிழுந்து சோர்வடைகிறாள். கீசகன் விரைந்துவந்து]

கீசகன்:—(கோபக்குறியுடன்) பேயுருக்கொண்டபேயே! நாணங்கெட்ட நாயே! நடுசபையிலா வந்தாய்?

[விரதசாரணியின் சிகையைப் பிடித்தாட்டி ஓங்கித் தலைமேலறைகிறான். சூரியபகவான் கீசகனது கருவமடங்கத் தனது வல்லமையைச் செலுத்தி மரம் போல் கீழேவிழும்படிச் செய்கிறார். அனைவரும் திகிலடைகின்றார்கள். பலாயனன் கண்களிற் பொறிசிதற எதிரிலிருக்கு மரத்தை நோக்கிப்பார்க்கிறான். அதுகண்ட கங்கபட்டர்]

கங்கபட்டர்:—பலாயனா! இது பச்சைக்காவல் விருக்ஷம். உன் இச்சைப்படி யெரிக்கக் கட்டையாகாது. அதுவும் நால்வர் சூழ நிழல் தருகின்றது. பதட்டத்தைவிட்டு அமைதியோடு காட்டிற்குச் சென்றால் காய்ந்த விருக்ஷம் கணக்கிலாதது. உன்னிஷ்டப்படி வெட்டி சாய்க்கலாம் கேட்பாரில்லை. (பலாயனன் தலையைச் சாய்த்துக்கொள்கிறான். விரதசாரணி நிலைதெளிந்து)

சுருட்டி—அடை.

பல்லவி.

ஐயையோ! அநியாயம்! கேட்பாரிங்கு
யாரில்லையோ? நியாயம் (ஐ)

அநுபல்லவி.

செய்யமனுநீதி செங்கோலரசரே!
வையத்தடுக்குமோ? தெய்வம் பொறுக்குமோ? (ஐ)

சரணம்.

பெண்பழி வீண்போகுமோ? பேயுமிரங்கு
மென்பாரே! இது தர்மமோ?
மண்ணிற்கொடியபாவம் நண்ணித்தொடருமல்லோ?
கண்ணிற் கண்டுமனது கரையாதென்ன கல்லோ? (ஐ)

**பிரதசாரணி**:—(அரசனைவிளித்து) அன்னைபோலும், தந்தைபோலும், மன்னுயிர்களுக் கென்றும் இன்னல் விளையாமல் தன்னுயிர்போற் காக்குந் தகைமையன்றே மன்னர்க்குரியது. அந்தோ! சண்டாள கீசகன் என்னைப் பெண்டாள நினைத்து முண்டக மதத்தான் மண்டையி லடித்தானே. தண்டிக்க நியாயமில்லையா? மண்ணுலகில் துஷ்டரை சிஷ்டைசெய்வது மன்னர்கடமையன்றோ? தனக்கொன்றும், பிறருக்கொன்றுமாகக் கொள்வதாநெறி? "சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லென்றோரே?" நீதிமானென்று மேதினிபுகழு மன்னரே! நிரபராதியாகிய வென்னை கீசகனென்ற பரமசண்டாளன் செய்ததைக்கண்ணாரக்கண்டும் ஒரு வார்த்தையும் புகலாது ஓரஞ்சாதிக்கின்றீரே? இதுதானோ மநுநீதியின்முறை? மேகத்தை நோக்கும் பயிர்போலே குடிகள் அரசனுடைய ஆதரவை யல்லவோ நோக்குவது? அத்தகைய அரசர் குடிகளைக் கடைக் கண்ணாலும் நோக்காது திடசித்தங்கொண்டு உபபலமென்றுந் தன் சுயநலத்தைப்பாராட்டி சும்மாவிருப்பது தர்மமா? "தெய்வம் நின்று சாதிக்குமல்லவோ?" சிறந்த இரதகஜ துரகபதாதிகளும் மற்ற சகல பலங்களுமிருக்கினுஞ் செருக்கால் நாமேயென்று அகம்பாவமுற்றால் இருப்பிடமில்லாமற் போய்விடுமன்றோ? பூபதி! தங்கள் மனசாக்ஷிக்கு விரோதமாய் அவனைத் தண்டிக்காமல்விட்டால் பெரும்பழி வந்து சம்பவிக்கும். என்னையாளுடைய ஐந்து கந்தர்வர்கள் யாவும் பார்த்துக்கொண்டிருக்கிறார்

கள். சண்டாளன் எவ்விதமும் இம்சையடைவான். சந்தேகமில்லை.

[கீசகன் மூர்ச்சை தெளிந்து நாணத்துடன் சரேலென்று போய் விடுகிறான்.]

விரதசாரணி :—

செருவிலெனுட் டலரைக் கொன்று திரைகொண்டு நாடுகாத்துப்
பொருளினை யீட்டிக் கள்வர் புல்லவர் சுற்றமாதி
பருகத லிலாரைக் காத்துப் பயிலறமாதி மூன்றின்
மருவுற விடுத்துச் செங்கோல் வளர்ப்பது மாட்சியாமே.

(கதறுகிறாள்.)

விராடன் :—(விரதசாரணியைப் பார்த்து) விரதசாரணி!

தோடி— ஆதி.

பல்லவி.

வருந்தாதே வந்தா! நீயே (வரு)

அநுபல்லவி.

அறியேன் தெரியேன் உரிய காரணம் (வரு)

சரணம்.

சிறந்த குணவதியே! சித்தங்கலங்காதே
திறமா யாராய்தலறமே நிலத்தே (வரு)

கீசகன் செய்தது குற்றமெனவே கொள்வேன்
யோசித்து யாவு மினிது புரிவேன் (வரு)

கீசகன்செய்தது குற்றமென்றேகொள்வேன். ஆனால்என்ன காரணமாய் அவ்விதஞ் சீற்றங்கொண்டானென்று தெரியவில்லை. காரணந் தெரியாமல் தண்டிப்பது முறைமையாகுமோ? தீர்க்காலோசித்து யாவுஞ் செய்வேன்.

கங்கபட்டர் :—ஆம். ஆம். மன்னர் சொன்னது முற்றிலுஞ் சரியே. ஆராய்ந்து செய்வதே அறமாகும். காமம் நரகமென்கிற வாயிலுக்கு நடபாவியாக உள்ளது. அது தன் பிராணனையுந் துரும்பாகப்பாவித்து பிறரை இம்சிக்கவும்

இடந்தரும். காமவெறிகொண்ட நாய்கள் கீர்த்தி அப கீர்த்தியென்பதைக் கனவிலுஞ்சிந்தியாரென்று சந்தேகிக் கிறாய். இனியிவ்விதம் நடைபெற மன்னரிடங்கொடார். ஏனெனின், "ராஜா ராஷ்ட்ரம் கிருதம் பாபம்" என்பதனு னே பிரஜைகளாலெழும்பாவம் மன்னனையே சேருமென்ப தும், தம்விளக்கென்று முத்தமிட்டால் சுடாமற்போகா தென்பதையும் நீதிமானாகிய விராடபதியறிவார். தீர்க்கா லோசித்து தண்டிப்பார். என் வீணாய் வருந்துகிறாய். உனக் கைந்துகந்தர்வர்களுயிர்த்துணையென்றும், மகாவல்லவர்க ளென்றும், சகலமுமவர்களறிவார்களென்றுஞ்சற்றுமுன்பு சாற்றினையே. அத்தகைய வல்லமையுடையோரே கால பேதங்களை யநுசரித்துச் சும்மாவிருக்க, நீ பதறலாமோ? கணவன் நெறியில் நின்றொழுகு மாதையல்லவோ கற்பு டையாளென்பது. ஸ்திரீகளுக்குப் பெருமையும் புக ழும் கீர்த்தியுந் தருவது கற்பன்றோ? நற்குலத்திற்பிறந்த பெண்ணாகப் புலப்படும் நீ என்சொல்லைக் கேட்டுச்செல். இதனால் உனக்குச் சுகிர்தமுண்டு.

**விரதசாரணி** :—தெய்வமே! இப்படியுமென் றலையிலெழுதியிரு ப்பாயா? இராஜசபையிலுமெனக்குச் சரியான நியாயங் கிடைக்கவில்லையே. ஹா—ம். இருக்கட்டும். இன்னுமென்ன நிகழ்கின்றதோ பார்ப்போம். (போகிறாள்.)

---

## அங்கம் V. காக்ஷி 2.

இடம் :—மடைப்பள்ளி.

காலம் .—நள்ளிரவு.

நடர்:—விரதசாரணி, பலாயனன்.

[மடைப்பள்ளியில் பலாயனன் சயனித்திருக்குந் தருணம் விரதசாரணி பிராப்தமாகிறாள்.]

**விரதசாரணி**:—பிராணபதிக்கு அயர்ந்தநித்திரைபோலும். ஆம். என்ன கவலையிருக்கின்றது. அன்று துர்ச்சாதனன் செய் ததுபோல்தானே. வேறே விசிதமாவென்று மதித்தார் போலும். ஹா—ம்.

பலாயனன் :—(திடுக்கிட்டெழுந்து) ஆ! கண்மணி! என்னயிது? உறக்கத்தை நீத்து இந்நடுநிசியில் தனியாகப் போந்தனையே? அந்தோ! விளைந்ததுன்பம் போதாதா?

விரதசாரணி :—ஹா. நாதா! உறக்கங் கெட்டுவிட்டதென்று வருந்தப்படுகின்றீர்? நன்றாயிருக்கின்றது. கண்டவனெல்லாம் பெண்டாகப் பாவிக்கும் இரண்டுங் கெட்ட பாவிக்கு உறக்கங்கூடவா? (துக்கப்படுகிறாள்.)

பலாயனன்:—பிரியே! நாம் தற்போதிருக்கும் நிலைமையைக்கருதாமலே மனங்கொண்டவாறு பேசுகிறாய். அது முற்றிலுந் தவறு. உன்னைவிட புருஷர்களுக்கதிகமிருக்குமென்றமதி. சமயம் வரும்போதல்லவோ சாதிக்கவேண்டும்.

விரதசாரணி :—ஆம். ஆம். மெத்தவுஞ் சரி. நல்லசமயம் வாய்ப்பதெப்போ? சண்டாளன் வல்லுயிர்போக்குவதெப்போ? "அலையொழிந்தபின் கடல் நீராடுவதுபோலோ?"

பலாயனன் :—தையலே!

நாதநாமக்கிரியை—ஆதி.

பல்லவி.

நல்ல குணவதியே! நம்மாலாகுநிலையில்
என்னளவுமுளதோ? இயம்புவாய் உலகில் (ந)

அநுபல்லவி

எல்லா மவன்செயலே வருந்தலேன் வீணே
இனிது முடியுந்தேனே! கனிவடைவாய் தானே (ந)

சரணம்

அந்நாட் கொடியதூர்ச்சன் ஆடையுரியும்போது
நன்மைவந் தெய்திட செய்ததரோது?
பன்றௌ னெம்முடன் பழகியும் வாது
பலபலவிதம்பேசி நீ
கலங்கல் நலமாமோ? யோசி (ந)

தாமரையின் நீர்போல் தத்தளிக்கும் நமது நிலைமையை யோசிக்காமலே பேசுகிறாய். சற்று அமைதியோடு கவனி. பகைவர் நமது துப்பறிந்துவிட்டால் மீண்டும் பன்னிரண்டாண்டு வனசஞ்சாரத்திற் கிடமாகிவிடுமே. அதற்காக வல்லவோ பெட்டியிலடங்கிய பாம்புபோல் பேசாமலிருப்பது.

**விரதசாரணி** :—பிராணேசா! மானமே உயிரினுஞ் சிறந்த மாண்பாயினமையின் மானம் போனபின் உயிரோடு உலகில் வாழ்தலைப்பார்க்கினும் உயிரிழப்பது சால சிறப்பாகுமல்லவோ? இத்தேகமாயிர மாண்டிருக்கினு மழியுமென்பது நிச்சயம். அத்தகைய தேகத்திற்கொரு துன்பம் விளையுமென்று பயந்தா கற்பையிழப்பது. நல்லசமாதானந்தான். (துக்கத்துடன்) தெய்வமே!

இந்துஸ்தான் பைரவி—ஆதி.

பல்லவி.

இந்த கதியாகவோ பெண்பிறந்தேன் நான்
அந்தோ! தெய்வமே! உன்றன் சோதனையோதான் (இ)

அநுபல்லவி.

சந்ததமு மிப்படி சஞ்சலங் கொள்ளுவான்
அந்த அயனெழுத்தோ அறியே னணங்குயான் (இ)

சரணம்.

அந்தநாள் துயர்செய்தான் அவனே கொடும்பாவி
ஆனாலுங் கீசகன் அவனிலும் படுபாவி
சிந்தை கலங்குதே செய்வதறியேன் மேவி
சித்தமிரங்குவா ரரில்லை பூவில் (இ)

உலகில் ஆடவர் காவலில் வாழும் அணங்கையர்கள் கணக்கில்லாதவர்களாகும். ஆயினும் என்னைப்போல் மானங்கெட்டவளும், மதிப்பற்றவளும், கேட்பாரற்ற பாவியும் உலகில் ஒருவருமிரார். அந்தோ! அந்தப்பாவி துர்ச்சாதனனால் அலக்கணடைந்தது போதாது அண்டிபிழைக்க வந்த இந்த விடத்திலும் பாவியினும் படுபாவி

கீசகன். அகத்தால் அளவுகடந்து இகழ்ந்ததுமன்றி, சபையில் எல்லோரும் நகைக்கும்படியாக கூந்தலைப் பற்றியிழுத்து மோதி தலையின்மேலறைந்தானே. பெண்ணாகப் பிறந்தவளென்று யாராயினுமெண்ணிப் பார்த்தார்களா? சீ, இனி இந்ததேகத்தோடு வாழ்வதைப் பார்க்கிலும் உயிரிழப்பதே உத்தமம். (சரேலென்று திரும்புகிறாள்)

பலாயனன்:—ஆ! ஹா!! (கையைப் பற்றிக்கொண்டு) என்னுருயிரமுதே! ஏன் அவசரப்படுகிறாய்?

மால்கோஸ்—அடை.

பல்லவி

மாதே! நீ கலங்காதே—மங்களகுண
கோதே! நீ கலங்காதே (மா)

அநுபல்லவி.

ஆதரவாகிய அண்ணல் செயலன்றோ? (மா)

சரணம்

அழுதாலாகுமோ? நொந்தாலாகுமோ?
அவரவர் வினைப்படி அநுவகாமற் போகுமோ?
முழுமுதற் கடவுளார் முற்றுந் துணைசெய்வார் (மா)

குணவதி எப்போதாயினு முன்னிஷ்டத்திற்கு இடையூறு செய்ததுண்டா? எது எவ்வாறாயினுமாகுக. உனது அபிப்பிராயமென்ன?

விரதசாரணி:—திறல் வேந்தே! சகலரும் நிறைந்தசபையில் உங்கள் கண்கள் காணவும், என் நன்னெஞ்சந் துடிக்கவும் பெண்ணென்று இரக்கமின்றி கூந்தலைப்பிடித் தாட்டிய சண்டாளனெவனோ? அவன் நெஞ்சைப் பிளந்து நமன் பதி சேர்த்தாலன்றி இப்பிரபஞ்சத்தில் உயிரோடு வாழேனிது உண்மை.

பலாயனன்:—காதலி! கட்டாயம் அவ்வாறே செய்வேன். இனி அஞ்சேன். பஞ்சமாபாதகன் நெஞ்சைப்பிளந்து வஞ்சந்தீர்ப்பேன். இது திண்ணம். ஆனால் நான் சொல்

வதுபோல் சிரமத்தையும், வெட்கத்தையும் பாராது நிறமாகச் செய்துமுடிப்பாயாகில் பொல்லாப்பதரை சில்லெனச் சிதைத்து வல்லுயிர் போக்குவேன். தடையில்லை.

**விரதசாரணி** :—மனத்திற் கிசைந்த மணாளரே! உமது திருமொழிக்கு மறுமொழி சொல்வேனோ? ஆக்கினைப்படியே செய்ய சித்தமாக விருக்கிறேன்.

**பலாயனன்** :—பிரியே! தற்போது கொண்டிருக்கும் மனக்கலக்கத்தை யொழித்து யானுன்னுடனேயிருப்பதாக மதித்து முகமலர்ச்சி கதித்து கீசகனை தந்திரமாய்சந்தித்து அவன் கருத்துக்கிசைந்தவள்போல் நடித்து உறிதங்கூறி நாளைய தினம் நடுராத்திரியில் இந்நகர்க்குத் தென்புறமிருக்கும் பூங்காவிற்கடுத்த வசந்தமண்டபத்திற்கு வரும்படியாகப் போதித்து நீயுமங்கு வந்திருப்பாயாயின், நான் அந்தச் சண்டாளனை சின்னாபின்னமாகச் சிதைத்துவிடுகிறேன். இனி தாமதிக்கவேண்டாம். விரைந்து செல்.

**விரதசாரணி** :—அப்படியே. (போகிறாள்.)

---

## அங்கம் V. காக்ஷி 3.

இடம் :—வசந்தமண்டபம்

காலம் :—நடுநிசி.

நடர் :—கீசகன்.

[பலாயனன் பெண் வேடம்பூண்டு கீசகன் வரவை எதிர் பார்க்கிறான். விரதசாரணி மறைவாக விருக்கிறாள். கீசகன் பிரரப்தம்.]

**கீசகன்** :—ஆம். ஆம். நம்மை எதிர்ப்பவர் யார்? ஒருவருமில்லை. . . . . (நகைத்துவிட்டு) என்ன பிகுவு செய்தாள். அவளெண்ணம் பலித்ததா? வலியேவந்து வார்த்தையாடினாள். (தலையைசைத்துவிட்டு) நாம் இப்போது பிகுவோடே நின்றுவிட்டாலும் விடலாம். வேண்டாம். அப்படிசெய்யப்படாது. நம்மைநம்பி இந்நள்ளிருளில்

வந்திருப்பாள். (சற்றுயோசித்து அபூர்வமாக) ஆம். நமக்கே இவ்விருளில் நலந்தோன்றாத திகைக்கநேர்ந்ததே. பேதைப்பெண் எப்படிவருவாள். ஒருகால் வராமல்நின்றுவிடுவாளோ? ஹா. ஹா. அவ்விதஞ்செய்யாள். நல்லவாசனை திரவியங்களுங் கொண்டுவருவதாக வாக்களித்துச் சென்றாளே. கட்டாயம் வருவாள். நல்லது குறிப்பிட்டவிடத்திற்கே போவோம். (சிலதூரம்போய்) ஆ! ஹா!! என்ன வாசனை வீசுகின்றது? இது எவ்விடத்திலிருந்து வருகின்றதோ? . . மெச்சத்தகுந்தது! மெச்சத்தகுந்தது!! பேஷ்! பேஷ்!! கஸ்தூரி, புனுகு, ஜவ்வாது, சந்தனம், குங்குமம், சுவாகம், ஈரான், பன்னீர், பச்சிலை, மல்லிகை, முல்லை, இருவாக்ஷி, மனோரஞ்சிதம், பாரிசாதம், பாதிரி, மன்மதபாணம், தவனம், குரிவேர், வெட்டிவேராதியவெத்தனையோ வாசனை திரவியங்களை யனுபவித்திருக்கிறோம். ஆனால் ஒன்றையேனுமிதற்குச் சமதியாகச் சொல்ல சாத்தியப்படவில்லையே. ஆ! ஹோ!! இப்போது ஞாபகத்திற்கு வந்தது. விரதசாரணி கொண்டுவருவதாகச் சென்றாளே அன்னவள் பரிமளத்துடன் என்னைநாடி இவ்வழியே போயிருப்பாள். ஆம். அப்படித்தான். காதற்கிளியே! உன் பாதம்பட்டவிடமே இப்படி மணக்குதே! அணிகளணிந்த உன்தேகம் எப்படி மணக்குமோ? இனி யொரு நிமிஷமும் தாமதிக்கமாட்டேன். நீ கட்டாயம் வந்தேயிருக்கிறாய். சந்தேகமேயில்லை. வந்தேயிருக்கிறாய். (விரதசாரணியை சமீபித்து) வந்தேன். வந்தேன்.

தேசிகம்—ஆதி.

பல்லவி.

அந்தமிகு சுந்தரியே வந்தேன் வந்தேனிதோ (அந்)

அநுபல்லவி.

சந்திரவதனமே சாற்றரும் செண்பகமே
எந்தனாசைக் குகந்த எழிலார் சொரூபமே (அந்)

சரணம்.

எனது சஞ்சலங்கண்டு இரங்கிய கருணைக்கு
என்ன கைம்மாறு செய்வேனுனக்கு (அந்)

சுந்தரமே! உறங்குவதுபோல் விளையாடுகிறாயோ? தாமதித்து வந்தேனென்று தளர்வுகொண்டனையோ? இதோ நமஸ்கரிக்கின்றேன். மன்னித்து உள்ளன்போடு ஒரு முத்தம் கொடுக்க முயலுவாய். காதற்கிளியே! கனிரசமே! கற்கண்டே! ஓதற்கரிய மாங்குயிலே! உனக்குத் தீதே செய்துவந்த பாதகனாகிய வென்மீது இரக்கம்வைத்த உன்பெருங் கருணைத்திறத்திற்கு யென்ன கைம்மாறு செய்யப்போகிறேன். (சற்று பொறுத்து) அன்னமே! நடந்துவந்த அலுப்போ? சற்று கண்விழித்துப் பார். கனகாங்கி! எனக்காக இந்நடுநிசியில் வனத்திற்கு வந்தனையே? வனசரங்களாலேதேனுந் துன்பமணுகினால் நானல்லவோ அப்பழிக்குப் பாத்திரனாவேன். விழித்துக்கொள். ஓ! ஹோ!! நாணங் காரணமோ? பெண்கள் நாயகமே! நானே உனக்கு முத்தங்கொடுக்கிறேன்.

[சமீபித்து முத்தமிட யிசைகிறான். பலாயனன் பொருத்த சப்தத்துடன்சீறி சிரசைப்பிடித்து பக்கத்திலிருந்த விருக்ஷத்தால் மோதியடித்துக் கீழே தள்ளிவிட்டு திரௌபதியை யழைத்துக் காண்பிக்கிறான்.]

முன்னுறு பொருள் கட்கெல்லா முற்படு பழையாய்போற்றி
பின்னுறு பொருள் கட்கெல்லாம் பிற்படு புதியாய்போற்றி
புன்மதி யாளர்தேறாப் பூரண முதலே போற்றி
சின்மயத் திருவேகம்ப சிவசிவ போற்றி போற்றி.